# வைதிக தர்ம வர்த்தனீ



ஸ்ரீ ஐயப்பன்.

மலர் 12 ]   விளம்பி௵ தைமீ.   [ இதழ் 4.

ஆசிரியர் : ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

## விளம்பி௵ தைமீ ஹேமந்தருது உத்தராயணம்.

| தமி. | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ப்ரா. திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | புத | பஞ். | 6-50 | பூராட். | 23-17 | அ. சி. | ஷஷ் |
| 2 | 15 | வியா. | ஷஷ். | 11-25 | உத்தி. | 29-25 | சி. | ஸப். |
| 3 | 16 | வெள். | ஸப். | 17-22 | ரேவ. | 36-42 | அ. | — |
| 4 | 17 | சனி. | அஷ். | 24-5 | அசு. | 44-32 | சி. | அஷ் |
| 5 | 18 | ஞா. | நவ. | 30-50 | பர. | 52-10 | சி. | நவ. |
| 6 | 19 | திங். | தச. | 36-55 | க்ருத் | 59-0 | ம. அ. | தச. |
| 7 | ஜனவரி௴ 20 | செ. | ஏகா. | 41-50 | ரோ. | 60-0 | அ. | ஏகா. |
| 8 | 21 | புதன். | த்வா. | 45-15 | ,, | 4-37 | சி. | த்வா. |
| 9 | 22 | வியா. | த்ர. | 47-0 | மிருக. | 8-42 | ம. | த்ர. |
| 10 | 23 | வெள். | சதுர். | 47-10 | திரு. | 11-15 | சி. | சசி. |
| 11 | 24 | சனி. ○ | பௌ. | 45-55 | புன. | 12-17 | சி. | பௌ |
| 12 | 25 | ஞா. | ப்ர. | 43-30 | பூச. | 12-2 | சி. | ப்ர. |
| 13 | 26 | திங். | த்வி. | 40-10 | ஆயி. | 10-47 | சி. ம. | த்வி. |
| 14 | 27 | செவ். | த்ரி. | 36-12 | மக. | 8-45 | சி. | த்ரி. |
| 15 | 28 | புத. | சது. | 31-47 | பூர. | 6-12 | அ. | சது. |
| 16 | 29 | வியா. | பஞ். | 27-5 | உத். | 3-17 | ம. சி. | பஞ். |
| 17 | 30 | வெள். | ஷஷ். | 22-15 | ஹஸ். | 0-12 | அ. சி. | ஷ.ச. |
| | | | | | சித். | 57-0 | | |
| 18 | 31 | சனி | ஸப். | 17-20 | சுவா. | 53-47 | அ. சி. | அஷ் |
| 19 | 1 | ஞா. | அஷ். | 12-22 | விசா. | 50-32 | ம. | நவ. |
| 20 | 2 | திங். | நவ. | 7-25 | அனு. | 47-22 | சி. | தச. |
| 21 | 3 | செவ் | தச. | 2-40 | கேட். | 44-22 | அ. | ஏகா. |
| | | | ஏகா. | 57-58 | | | | |
| 22 | பிப்ரவரி௴ 1959 4 | புதன் | த்வா. | 53-45 | மூலம். | 41-45 | ம. அ. | த்வா. |
| 23 | 5 | வியா. | த்ர. | 50-5 | பூரா. | 39-37 | சி. | த்ர. |
| 24 | 6 | வெள். | சசி. | 47-15 | உத்தி. | 38-15 | சி. ம. | சது. |
| 25 | 7 | சனி ● | அமா. | 45-32 | சிர. | 37-57 | சி. | அமா |
| 26 | 8 | ஞா. | ப்ர. | 45-10 | அவி. | 38-55 | ம. சி. | ப்ர. |
| 27 | 9 | திங். | த்வி. | 46-22 | சத. | 41-22 | சி. ம. | த்வி. |
| 28 | 10 | செவ். | த்ரி. | 49-8 | பூரட். | 45-22 | ம. அ. | த்ரி. |
| 29 | 11 | புதன் | சது. | 53-30 | உத்தி. | 50-52 | சி. | சது. |
| 30 | 12 | வியா. | பஞ். | 59-10 | ரேவ. | 57-37 | சி. அ. | பஞ். |

1௳ பொங்கல், 6௳ கிருத்திகை, 7௳, 21௳ ஏகாதசி. 9௳, 23௳ ப்ரதோஷம், 12௳ தைபூசம், 25௳ அமாவாஸை.

**ஓயாமல் ஒன்றைக் கூறினால் அதில் பற்றுண்டாகும்.**

வைதிக தர்ம வர்த்தனீ.



விளம்பிஹு தைமீ.

மலர் 12]  [இதழ் 4.

தனிப்ரதி அணு 7.

வருஷசந்தா ரூ. 5

காரியாலயம்: கடவாசல்,
வடகால் P.O. (Via.) சீர்காழி
(தஞ்சை ஜில்லா.)

## பொருளடக்கம்.



## தப்பையா விருத்தி செய்வது?

ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸர்வக்ஞர் ஸர்வ சக்தி உள்ளவர். ஹாஸ்ய ரஸம் ததும்ப தான் சிரிக்காமல் பிறரை சிரிக்கவைப்பார்கள். வளவனூர் விஜயத்தில் வேதசாஸ்த்ர ஸங்கீத மறியாத ஒருவர் ஆசையால் காலக்ஷேபம் செய்தார் ஸன்னதியில். கருணாமூர்த்தி அதற்கு இடந்தந்தார். முடிவில் பாகவதர் அவையடக்கமாக தப்புந்தாறுமாக ஸன்னதியில் உளறி கொட்டினேன். பெரியவாள் விருத்தி செய்யவேண்டும் என்றார். உடனே தப்பையா விருத்தி செய்வது? என ஆசார்யாள் கூற ஸபையில் ஒரே சிரிப்பு. மறுமுறை வந்து நன்றாக காலக்ஷேபம் செய்யும் என்றார்கள்.

## நீச பாஷை பேசாதே.

மன்னார்குடி பெரிய சாஸ்திரிகள் வேதாந்த சாந்தி பாடம் கூறும்போது ஒரு பண்டிதர் இன்று பாடம் ஜாஸ்தி ஆனது என்றார். சாஸ்திரிகள், நம் லேச்சிதவை நாப பாஷிதவை—நீச பாஷை அப்பாஷை; பேசாதே—என்றார். தான் கூறியதில் எதுநீசபாஷை? என்று பண்டிதர் விழித்தார். ஜ-தாது அதன்மேல்; அஸ் அதன்மேல் திங் ப்ரத்யய: என்றார். ஜாஸ்தி என்ற உருடுபாஷையை திருப்பிக் கூறாமல் என்ன சாதுர்யமாக எடுத்துக் காட்டுகிறார். ச்ராத்த காலத்தில் கூட "ஹாட் வாட்டர்" வேண்டுமா என சிலர் கூறுகின்றனர். பாபம்!

## கோ சம்ரக்ஷணம்.

**1. கஞ்சியையும், கழுநீரையும் வீணாக்காமல் ஒரு பாத்திரத்தில் சேகரித்து, பசுமாடுகளுக்குக் கொடுத்து ரக்ஷிக்கவும்.**

**2. காய் கறிகளை நறுக்கும் பொழுது மிஞ்சும் காய் கறி பாகங்களைப் பசுவுக்குத் தந்து ரக்ஷிக்கவும்.**

**3. கால்நடைகள் நமக்கு உழைக்கின்றன. அவற்றைக் காப்பாற்றுவது நமது கடமை.**

**—ஸ்ரீ ஆசார்ய சுவாமிகள்,**
காஞ்சி காமகோடி பீடம்.

**ஜாதி ஒழித்தல் என்ற கூச்சல் எங்கும் பலமாயிருக்கிறது**

# PRICE LIST.

## மாம்பலம் குருகுல வெளியீட்டின்

# புத்தக விலை விபர ஜாப்தா.

ஆசிரியர் இயற்றிய நூற்றுக்கணக்கான நூல்களில்
**கைவசமுள்ள அரிய ப்ரசுரங்கள்.**

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1. | 18 புராணம் 5-பாகமும் சேர்ந்து | 18 | 0 |
| 2. | ஸ்ரீ தேவீ பாகவதம் (700 பக்கங்கள்) | 8 | 0 |
| 3. | * ஸ்ரீ லலிதா ஸகஸ்ரநாம பாஷ்யம் | 2 | 8 |
| 4. | ஸ்ரீ பகவத் கீதாஸாரமும் பாத்ம கதையும் .... | 2 | 0 |
| 5. | ஸந்த்யாவந்தனம் ... .... .... | 1 | 4 |
| 6. | 40 ஸம்ஸ்காரம் .... .... ... | 1 | 4 |
| 7. | * ஸ்ரீ லலிதா ருத்ர த்ரிசதி (அர்த்தத்துடன்) | 1 | 0 |
| 8. | சிவநாம அஷ்டோத்ரம் (தமிழ் அர்த்தத்துடன்) | 0 | 15 |
| 9. | * விநாயக ஸகஸ்ரநாம ஸ்தோத்ரமும் நாமாக்களும் | 0 | 12 |
| 10. | ஸதாசாரம் ... .... .... | 0 | 10 |
| 11. | * ஆபஸ்தம்ப தர்ப்பணம் ஸ்வரத்துடன் .... | 0 | 10 |
| 12. | * ஸ்ரீஸுப்ரஹ்மண்ய ஸஹஸ்ரநாம அர்ச்சனை... | 0 | 8 |
| 13. | ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும் பூஜாகல்பமும் ... | 0 | 8 |
| 14. | யஜுர் உபாகர்ம விளக்கம் (4-ம் பதிப்பு) .... | 0 | 8 |
| 15. | ஸ்ரீ ஸ்துதி குஸுமாஞ்சலி (8-ம் பதிப்பு) .... | 0 | 6 |
| 16. | வைகுண்ட ஏகாதசி (5-வது பதிப்பு) .... | 0 | 6 |
| 17. | * ஸ்ரீ சிவகவச, இந்த்ராக்ஷீ ஸ்தோத்ரங்கள் .... | 0 | 6 |
| 18. | * ஸ்ரீசாரதா நவராத்ரிகதையும் ஸரஸ்வதிபூஜையும் | 0 | 6 |
| 19. | ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் (மூலம்) | 0 | 6 |
| 20. | * நித்ய பஞ்சாயதந பூஜையும் பஞ்சாக்ஷரி ஸூர்ய நமஸ்காரமும் .... | 0 | 6 |

| | | | |
|---|---|---|---|
| 21. சிவாலய வழிபாடு | .... | 0 | 6 |
| 22. காசி, கயா, பிரயாகை, சேது யாத்திரை | ... | 0 | 6 |
| 23. ஸ்ரீ சிவராத்ரி பூஜையும் கதையும் ... | .... | 0 | 4 |
| 24. துளஸீ சரிதமும் – பூஜாகல்பமும் .... | .... | 0 | 4 |
| 25. சித்ரகுப்த, காமாக்ஷி (காரடை நோன்பு) ஸ்ரீராமநவமீ பூஜாகல்பங்கள் | .... | 0 | 4 |
| 26. ஸ்ரீ வரலக்ஷ்மீ வ்ரதமும் பூஜா கல்பமும் | .... | 0 | 4 |
| 27. விநாயகசதுர்த்தி பூஜாகல்பம் | ... | 0 | 4 |
| 28. சூதக ஆசௌச விளக்கம் | .... | 0 | 4 |
| 29. ஸ்ரீகோபிகா கீதமும்–ஸ்ரீபஜகோவிந்தமும் (2ம் ப.) | | 0 | 3 |
| 30. ஆதித்யஹ்ருதயமும் கனகதாராஸ்தவமும் | .... | 0 | 3 |
| 31. ஸங்க்ராந்தி பூஜையும், கோ பூஜையும் (2ம் பதி.) | | 0 | 3 |
| 32. வேதமும் வேதாங்கமும் (3-வது பதிப்பு) | ... | 0 | 3 |
| 33. சங்கர சரிதம் பூஜா கல்பத்துடன் | .... | 0 | 3 |
| 34. வியாஸ சரிதம் ... | ... | 0 | 2 |
| 35. அஷ்டபதி தத்வார்த்த ஸாரம் ... | ... | 0 | 2 |
| 36. ப்ரதோஷ பூஜை, கதை ... | .... | 0 | 2 |
| 37. சனிவார வேங்கடேச பூஜையும் அஷ்டோத்ரமும் | | 0 | 2 |
| 38. காவேரி பூஜை ... .... | .... | 0 | 2 |

* இக் குறியுள்ளவை நாகரமும் தமிழும் கலந்தவை.

**N. B.** மேற்கண்ட புஸ்தகங்களைப் பெற விரும்புவோர் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதி பெற்றுக் கொள்ளவும்.


ஆசிரியர் :

**ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,**

குருகுல ஸ்தாபகர் & பிரின்ஸிபால்,

**2, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம்,**

**T. நகர் — சென்னை—17.**


☞ சின்ன புஸ்தகத்திற்கு விலை தவிர புக் போஸ்டிற்கு 8 நயா பைசா ஸ்டாம்பு அனுப்பினால் சிலவு குறையும். V. P. செய்தால் 56 நயா பைசா அதிக செலவாகும். குருகுல தர்மத்திற்கே இது பயன்படுவதால் கமிஷன் கிடையாது.

# விநாயக புராணம்.

7 பயோததி க்ருதஞ்சைவ-சர்க்கரா மது ஸம்யுதம் |
பஞ்சாம்ருதம் க்ருஹாணேதம்-ஸங்கடம் மே நிவாரய ||
பஞ்சாம்ருத ஸ்நாநம் ஸமர்ப்பயாமி— (பூர்ண புருஷஸூக்தம்)

8 நர்மதா சந்த்ர பாகாச-கங்கா ஸங்கமஜைர் ஜலை: |
ஸ்நாபிதோஸி மயாபக்த்யா-ஸங்கடம் மே நிவாரய ||
ஸ்நாநம் ஸமர்ப்பயாமி— (யத்புருஷேண ஹவிஷா.........)

9 இபவக்த்ர நமஸ்துப்யம்-க்ருஹாண பரமேஶ்வர |
வஸ்த்ர யுக்மம் கணாத்யக்ஷ-ஸங்கடாந் மே நிவாரய ||
வஸ்த்ரயுக்மம் ஸமர்ப்பயாமி —(தம் யக்ஞம் பர்ஹிஷி.........)

10 விநாயக நமஸ்துப்யம்-நம: பரஶுதாரிணே |
உபவீதம் க்ருஹாணேதம்-ஸங்கடம் மே நிவாரய ||
உபவீதம் ஸமர்ப்பயாமி — (தஸ்மாத்.........)

11 ஈஶ புத்ர நமஸ்துப்யம்-நமோ மூஷிக வாஹந |
சந்தநம் க்ருஹ்யதாம் தேவ-ஸங்கடம் மே நிவாரய ||
சந்தநம் ஸமர்ப்பயாமி— (தஸ்மாத் யக்ஞாத.........)

12 க்ருத குங்கும ஸம்யுக்தா:-தண்டுலா: ஸுமநோஹரா: |
அக்ஷதாஸ்தே நமஸ்துப்யம்-ஸங்கடம் மே நிவாரய ||
அக்ஷதான் ஸமர்ப்பயாமி

13 சம்பகம் மல்லிகா தூர்வா-புஷ்ப ஜாதீரநேகஶ: |
க்ரஹாண த்வம் கணாத்யக்ஷ-ஸங்கடம் மே நிவாரய ||
புஷ்பாணி ஸமர்ப்பயாமி (தஸ்மாதஶ்.........)

14 லம்போதர மஹாகாய-தூம்ரகேதோ ஸுவாஸிதம் |
தூ$^{4}$பம் க்$^{3}$ருஹாண தேவேஶ· ஸங்கடம் யே நிவாரய ||
தூபம் ஆக்ராபயாமி— (யத்புருஷம்.........)

15 விக்நாந்த$^{4}$கார ஸம்ஹார-காரக த்ரித$^{3}$ஶாதி$^{4}$ப |
தீபம் க்ருஹாண தேவேஶ-ஸங்கடம் மே நிவாரய ||
தீபம் தர்ஶயாமி — (ப்ராம்மணோஸ்ய.........)

16 மோத$^{3}$கா பூபலட்டுகே-பாயஸம் ஶர்கராந்விதம் |
பக்வான்னம் ஸக்$^{4}$ருதம் தேவ-நைவேத்யம் ப்ரதிக்ருஹ்யதாம்
நைவேத்யம் ஸமர்ப்பயாமி — (சந்த்ரமாமநஸ:.........)

17 நாரிகேளப$^{2}$லம் த்ராக்ஷா-ரஸாலம் த$^{3}$ாடி$^{3}$மம் சுபம் |
ப$^{2}$லம் க்ருஹாண தேவேஶ-ஸங்கடான் மே நிவாரய ||
ப$^{2}$லானி ஸமர்ப்பயாமி — (நாப்யா ஆஸீத்.........)

18 க்ரமுகைலா லவங்காதி$^3$-நாக$^3$வல்லீ த$^3$ளாந்வித |
தாம்பூலம் க்ருஹ்யதாம்தேவ — ஸங்கடம் மே விநாஶய ||
தாம்பூலம் ஸமர்ப்பயாமி.

19 ஸர்வ ப்ரீதிகரம் தேவ-ஹிரண்யம் ஸர்வ வித்திதம் |
தக்ஷிணார்த்தம் க்ருஹாணேதம்-ஸங்கடம் மே விநாஶய ||
தக்ஷிணாம் ஸமர்ப்பயாமி — (ஸப்தாஸ்யாஸன் .........)

## 21 தூர்வைகளால் அர்ச்சனை.

1, கணாதி$^4$பாய நம:
2 உமாபுத்ராய ,,
3 அக$^4$நாஶநாய ,,
4 ஏகதந்தாய ,,
5 இப$^4$வக்த்ராய ,,
6 மூஷிக வாஹநாய ,,
7 விநாயகாய ,,
8 ஈஶபுத்ராய ,,
9 ஸர்வஸித்தி$^4$ ப்ரதாய ,,
10 லம்போ$^3$த$^3$ராய ,,
11 வக்ர துண்டாய நம:
12 மோத$^3$க ப்ரியாய ,,
13 விக்ந வித்$^4$வம்ஸ கர்த்ரே ,,
14 விஶ்வ வந்த்யாய ,,
15 அமரேஶாய ,,
16 கஜகர்ணாய நம: ,,
17 நாக$^3$யக்ஞோப வீதிநே ,,
18 பா$^3$ல சந்த்ராய ,,
19 பாஶா த$^4$ாரிணே ,,
20 விக்நாதி$^4$பாய ,,

21 வித்யா ப்ரத$^3$ாய நம:

கர்பூராநல ஸம்யுக்தம் அஶேஷா கௌ$^4$க$^4$ நாஶநம் |
நீராஜநம் க்ருஹாணேஶ-ஸங்கடாந் மாம் விமோசய ||
நீராஜநம் ஸமர்ப்பயாமி.

சம்பகாஶோக வகுள பாரிஜாத ப$^4$வைஶ் ஶுபை: |
புஷ்பாஞ்ஜலிம் க்ருஹாணேமாம் — ஸங்கடான் மாம்விமோசய
புஷ்பாணி ஸமர்ப்பயாமி.

த்வமேவ விஶ்வம் ஸ்ருஜஸி-இப$^4$வக்த்ர த்வமேவ விஶ்வம் பரிபாஸிதேவ | த்வமேவ விஶ்வம் ஹரஸேऽகி$^2$லேஶ த்வமேவ விஶ்வாத்மக - ஆவிபாஸி ||

## ஸ்துதி.

நமாமிதேவம் கணநாத$^2$மீஶம் - விக்நேஶ்வரம் விக்நவிநாஶ த$^3$க்ஷம்- | பக்தார்திஹம் -பக்தவிமோக்ஷ த$^3$க்ஷம்வித்யாப்ரத$^3$ம் வேதநித$^3$ாநம் ஆத்யம். || நமஸ்காரம் செய்து 21 ப்ரதக்ஷிணம் செய்யவேண்டும்.

யேத்வாம் அஸம் பூஜ்ய கணேஶ நாகம் வாஞ்சர்தி மூட⁴ா:
விஹிதார்த்த² ஸித்தி⁴ம் | த ஏவ கஷ்டா நியதம் ஹிலோகே.
க்ருதோ மயாதே ஸகல: ப்ரபா²வ: ||

## ப்ரார்த்தனை.

ஆசார்யஸ்த்வம் த்விஜாத்³யக்ஷ ஸர்வஸித்தி⁴ ப்ரதா³யக |
வாயநம் க்ருஹ்யதாம் ப்ரும்மன்-ஸங்கடான்மாம் நிவாரய ||
வாயந தாநம் தந்து விசேஷ அர்க்யமளிக்கவேண்டும்.
ப²ல புஷ்பாக்ஷதைர் யுக்தம் - ஜலம்தே தக்ஷிணார்விதம்
விஶேஷார்க்⁴யம் மயாத³த்தம் ஸங்கடாத் மாம் நிவாரய ||
[ஓம் நமோ ஹேரம்ப மத³மோதி³த மமஸங்கடம் நிவாரய
ஸ்வாஹா || ] என்ற மூலமந்த்ரத்தை குரு உபதேசம்
பெற்று ஜபிக்கவேண்டும். ஹோமமும் செய்ய
வேண்டும். மறுபடி இருபத்தோரு தூர்வைகளால்
அர்ச்சிக்க வேண்டும். முன் கூறிய 21 நாமாக்களே
மந்த்ரம். 21பழங்களை வாயநமாக அளிக்கவேண்டும்.
கணாதிப நமஸ்துப்யம்-ஸர்வஸங்கல்ப ஸித்தித |
வாயநஸ்ய ப்ரதாநேந-ஸங்கடான் மாம் நிவாரய ||
பிறகு விநாயக சரிதத்தை ஶ்ரவணம் செய்து மறுபடி
கீழ்கண்டபடி அர்க்யமளிக்கவேண்டும்.

1 திதீ²நாம் உத்தமே தேவீ- கணேஶ ப்ரிய வல்லபே |
ஸங்கடம் ஹரமே தேவி-க்ருஹாணார்க்⁴யம் நமோஸ்துதே ||
திதி²தேவதாயை நம: இத³மர்க்⁴யம்.

2 லம்போத³ர நமஸ்துப்⁴யம்- ஸததம் மோத³கப்ரிய |
ஸங்கடம் ஹரமேதேவ-க்ருஹாணார்க்⁴யம் நமோஸ்துதே ||
ஸங்கடஹர விக்னேஶ்வராய நம: இதமர்க்யம்.

3 க்ஷீரோ த³ார்ணவ ஸம்பூ⁴த-அத்ரி கோத்ர ஸமுத்³ப⁴வ |
க்ருஹாணார்க்யம் மயாத³த்தம் - ரோஹிண்யா ஸஹித: ||
ஶஶின் சந்த்ராயநம: இதமர்க்யம். ஏழுமுறை அர்க்யம்
இவருக்கு. பிராம்மண போஜநம் செய்வித்து
மிகுதியை ஏழுபிடி மௌநமாக புஜிக்கவேண்டும்.

இங்ஙனம் நான்கு மாதம் செய்தால் கோரியபலனை
நிஶ்சயமாகப் பெறலாம். மூன்று மாதமிதைச் செய்து
அகஸ்த்யர் ஸமுத்ரத்தைப் பாநம் செய்யும் ஶக்தி பெற்
ரூர். தமயந்தி ஆறுமாதம் செய்து நளனை அடைந்தாள்.
ருக்மிணீ தேவி தன் புத்ரனை ப்ரத்யும்நனைச் ஶம்பரா
ஸுரன் தூக்கிச்சென்றபோது ஸங்கடஹர சதுர்த்தி

விரதம் செய்ய அவன் ஶம்பரனைக் கொன்று ஜயத்துடன் திரும்பினான். பாணாஸுரனது பெண்ணான உஷை ப்ரத்யும்னனது புத்ரனான அநிருத்தனைத் தூக்கிச் சென்றபோது ப்ரத்யும்நன் இதைச் செய்து புத்ரனைப் பெற்றான்.

முதல் மாதம் அல்லது நாலாவது மாதம் அல்லது ஏழாவது மாதத்தில் உத்யாபநம் செய்யவேண்டும். கணாநாம்த்வா என்ற மந்த்ரத்தால் பத்தாயிரம் ஹோமம் அல்லது மூலமந்த்ரத்தால் ஆயிரம் அல்லது ஐநூறு முறை அல்லது நூற்றெட்டுமுறையாவது ஹோமம் செய்யவேண்டும். இங்ஙனம் க்ருதவீர்யன் அந்த விரதத்தையனுஷ்டித்தான். அவன் மனைவி கர்ப்பமானாள். விதிப்படி வேந்தன் வேண்டிய கர்மாக்களைச் செய்தான். ஒன்பதாவது மாதத்தில் கை கால்களில்லாத ஒருகுழந்தை பிறந்தது. அதைக்கண்டு தாய் தந்தை மந்த்ரி ப்ரஜைகள் அனைவரும் துக்கப்பட்டுக் கதறினர். கர்மகதியைவிளக்கி எல்லாம் அறிந்த ராமன் ஸ்வர்ண மானைத் துரத்திச் சென்றதேன்? தர்மம் அறிந்த தர்மராஜன் சூதாடச் சென்றதும் செய்த வினையாலல்லவா என்று சிலர் ஸமாதாநம் கூறினர்.

க்ருதவீர்யன் ஒருவாறு தைர்யம் கொண்டு அந்த குழந்தைக்கு ஜாத கர்மா முதலியவைகளைச் செய்தார். பரமதுக்கத்துடன் பனிரண்டு ஆண்டுகள் சென்றன. தற்செயலாக தத்தாத்ரேய முநிவர் அங்குவர அரசன் அவருக்குத் தக்கபடி அதிதி பூஜை செய்து தனது துக்கத்தைத் தெரிவித்தான். அவர் தனது க்ஞானத்ருஷ்டியால் விஷயத்தையறிந்து கூறினார். க்ருதவீர்ய! பெரியோர் சொற்படி நீ ஸங்கடஹர வ்ருதம் அநுஷ்டித்தாய். விநாயகருக்குப் பூஜை செய்கையில் உனக்கு கோட்டுவாய் உண்டானது. ஆசமநம் செய்து மேலே பூஜை செய்ய வேண்டும். அப்படிச் செய்யாததால் இத்தகைய புத்ரன் பிறந்தான். ஆயினும் ஏகாக்ஷர மந்த்ரத்தால் மறுபடியும் கணேஶனை ஆராதி என்றார். அரசன் கைகால்கள் இல்லாத புத்ரனை அருகில் வைத்துக்கொண்டு பனிரண்டாண்டு ஏகாக்ஷர மந்த்ரத்தால் விநாயகனை ஆராதித்தார். அவர் ப்ரத்யக்ஷமாகி கைகால்களைத் தந்து வேண்டிய பொழுது ஆயிரம் கைகள் உண்டாகும். உலகில்

ஒப்பற்ற வீரனாக விளங்குவாய். அணிமாதி அஷ்டஸித்திகளும் உண்டாகுமென ஆசீர்வதித்து மறைந்தார். அந்த புத்ரனிடம் ராஜ்யத்தையளித்து க்ருதவீர்யன் கானகம் சென்றான். அத்தகைய மஹிமை வாய்ந்தது ஸங்கட ஹர சதுர்த்தீ விரதம். அந்த விரத பலனை எனக்குத் தானம் செய்தால் இந்த விமானம் முன்போல் ஆகாசத்தில் செல்லுமென்றார் தேவேந்த்ரன் சூரஸேநனிடம்.

சூரஸேநனது உத்திரவுபடி தூதர்கள் தெருத்தெருவாக ஸங்கடஹர சதுர்த்தீ விரதம் செய்தவரைத் தேடிவந்தனர். ஓரிடத்தில் குஷ்டரோகியான சண்டாளி பூமியில் விழ அவளுக்கு நல்ல தேவ சரீரமளித்து அவளை ஆநந்த புவநத்திற்கு அழைத்துச்செல்ல விநாயகரது தூதர் வந்ததையும் கண்டனர். ராஜ தூதர்கள் அவர்களை வணங்கி இவள் யார்? என்ன புண்யம் செய்தாள்? என வினவினர். கணேச தூதர்கள் கூறினார்கள். வங்காளதேசத்து அரசனான சாரங்கதரன் என்றொருவனிருந்தான். அவனுக்கு ஸுந்தரா என்றோர் பெண்ணிருந்தாள். அவளது அழகும் இனிமையான குரலும் வேறெவருக்குமில்லை. ரதியே வேறு உரு எடுத்து வந்தனளோ என்றனர். சிறு வயதிலேயே அவளைக்கண்டு மயங்காதவரில்லை.

முனிவர்களும் இவளைக்கண்டு ஆத்மசக்தியை இழந்தனர். சித்ரன் என்ற ராஜகுமாரனுக்கு அவளை மணம்செய்வித்தார். ரூப மதத்தினால் அவள் பதியை மதிக்கவில்லை. எவரையும் மதிக்கவில்லை. பல புருஷர்களை மயக்கி தானும் கற்பை இழந்து பலரையும் கெடுத்தாள். இதைக் கண்டித்த புருஷனைச் சோர புருஷர்களது துணையால் இரவில் கொன்றாள். இதைக்கேட்ட அந்நாட்டு மன்னன் திடுக்கிட்டு அத்தகையவள் ஸ்த்ரீயல்ல பேய்தான். அவளை கொல்லுங்கள் என உத்தரவிட்டான். அங்ஙனமே ஸுந்தரா கொல்லப்பட்டு பலகாலம் நரகயாதனையை அனுபவித்தாள். பிறகு பூமியில் குஷ்டரோகமுள்ள சண்டாளியாகப் பிறந்தாள். ஒருநாள் மதுபானம் செய்து பகலெல்லாம் உறங்கினாள். இரவு வெகுநேரம் சென்ற பின் விழித்து எழுந்தாள். பசியால் வாடித் தெருத்தெருவாகத் திரிந்தாள். எங்கும் பிச்சை அகப்படவில்லை. ஒரு வீட்டில் ஸங்கடஹர சதுர்த்தீ விரதம் செய்து இரவில்

விநாயக சரிதம் கேட்டிருந்த வீட்டுக்காரர் இவளுக்குச் சிறிது அன்னமளித்தார்.

அங்கு கதையின் இடையே எல்லோரும் கணேசா கணேசா என்று கூறுவதைக் கேட்டு இவளும் குடிமயக் கத்தால் கணேசா என்ருள். அவள் இப்பொழுது இறக்க அவளை அழைத்துச்செல்ல விநாயக விமாநம் வந்திருக் கிறது என கணேச தூதர்கள் கூறினர்கள். இதைக் கேட்ட ராஜதூதர்கள் இந்த்ர விமாநத்திற்கு நேர்ந்த கதியைக்கூறி இந்த ஸ்த்ரீயை அந்த சக்ரவிமாநத்திற் கருகே வந்து அந்த புண்யத்தில் சிறிது தந்துபோகும்படி வேண்டினர். விநாயகரது உத்தரவில்லாமல் நாங்கள் அங்ஙனம் செய்யக்கூடாது என்று கூறி விமாநத்தில் அந்த ஸ்த்ரீயை ஏற்றிச்சென்றனர்.

அந்த விமாநமானது செல்லும்போது அதன் காற்று இந்த்ர விமாநத்தின்மீது பட்டது. சண்டாள ஸ்த்ரீயின் கண்ணும் அதன்மீது பட விமாநம் முன்போல் ஆகாய மார்க்கத்தில் சென்றது. தேவேந்த்ரன் சூரஸேன மன்ன ரிடம் விடைப்பெற்று ஸ்வர்க்கம் சென்ருர். சூரஸேனன் வஸிஷ்டரைக்கொண்டு இந்த விரதத்தை விடாமல் அநுஷ் டித்து வந்தான். முடிவில் திவ்யமான விமாநத்துடன் வந்து கணேச கணங்கள் வேந்தனை ஆநந்தபுவநம் வரும்படி அழைத்தனர். அரசன் தன்நகரத்திலுள்ள அனைவரையும் கூடவே அழைத்துச் செல்ல உத்தரவளிக்க வேண்டுமென ப்ரார்த்தித்தான். அங்ஙனமே அனைவரும் விமாநத்தில் ஏறினர். அதில் ஒரு குஷ்டரோகியும் இருந்தான். ஆதலால் அந்த விமாநம் மேலே கிளம்பவில்லை. அதை அறிந்த தூதர் அரசனை நோக்கி அவனைக் கீழே இறக்கி விடும், மற்றவர்களுடன் செல்லலாம் என்ருர்கள்.

அவனை விட்டுச்செல்ல எனக்கு விருப்பமில்லை. அவன் என்னபாபம் செய்தான்? கூறுங்கள் என்ருன் அர சன். கணேச தூதர் கூறினர்கள். கௌடதேசத்தில் தூர்வர் என ஒரு வேதியர் இருந்தார். அவர் மிக்க தர்ம சீலர். அவரது மனைவி சாகிநி என்பாள். இருவரும் நீண்டகாலம் கர்மாநுஷ்டாநம் செய்து இல்லறத்தைச் செவ்வனே நடத்தினர். முதிர்ந்த வயதில் அவர்களுக்கு

ஒரு புத்ரன் பிறந்தான். மிக்க அன்புடன் அவனை வளர்த்தனர். அவன் என்னகுற்றம்செய்தாலும் கண்டிப்பதில்லை. விதிப்படி உபநயநம் செய்வித்தனர். குழந்தை கஷ்டப் படக்கூடாதென கல்வி கற்பிக்கவில்லை. அவனிஷ்டப்படி ஆடி ஓடி விளையாடித் திரிந்தான். நற்குலத்திலுதித்த ஒரு கன்யகையைத் தேடி மணம்செய்வித்தனர். அவள் பெயர் ஸாவித்ரீ. ஸாவித்ரீ போலவே மஹாபதிவ்ரதை அவள். கேட்பாரில்லாததால் புதன் எனும் அவன் பாபகர்மாவில் ஈடுபட்டான். பெற்ருேர் அன்பினுல் அதைக்கண்டிக்க வில்லை. வேசியிடம் ஆசை கொண்டு பெற்ருேரது பொருளையும் மனைவியின் ஆபரணங்களையும் அவளுக்கு அளித்தான். இரவும் பகலும் வேசி வீட்டிலேயே தங்கினுன். பெற்ருேர் அவனைத் தேடிச் செல்வர். அவன் ஒளிந்து மறைவான். அவனைத் தேடி வழியில் வருபவரை எல்லாம் என் மகனைக் கண்டாயா எனக் கதறுவர் வயதான தந்தை.

மிக்க அயோக்யனுன அவனிடம் ஏன் அவ்வளவு அன்பு? கட்டிய மனைவியையும், போற்றி வளர்த்த உங்களையும் அவன் மதிக்கவில்லையே! என்று நல்லார் கூறுவது அன்பினுல் அவர் காதில் விழுவதில்லை. அவனைப் பாபி என நம்பவில்லை. ஒருநாள் பீமன் எனும் நீசனெருவன் இவரிடம் இரக்கம் கொண்டு அவன் வஸிக்கும் தாஸீக்ருஹத்திற்கு அழைத்துச் சென்ருன். அவன் மது மாம்ஸம் அருந்தி வேசியிடம் மயங்கி இருப்பதை நேரில் கண்டார். தந்தை சொல்லொணு துக்கத்தை அனுபவித்தார். துக்கம் ஒருபுறம். அன்பு ஒருபுறம். என் செய்வது. அன்பைவிட தர்மமே தலைதூக்கி நின்றது. என்குலத்திலே என் வயிற்றிலே தோன்றி இந்த மஹாபாபம் செய்கிருயே? என்று தலையிலடித்துக் கொண்டார். இவ்வளவு வயதாகியும் உமக்கு புத்தியில்லையே! ஈ எரும்பு புழுமுதல் எல்லோருக்கும் ஸ்த்ரீ போகத்தில் ஆசை உண்டல்லவா? இதைத் தடுக்கிறீரே என்று ஓங்கி அறைந்தான் அவரது கன்னத்தில். வயதான அவர் அங்கேயே விழுந்து உயிரை விட்டார். புதன் அதைக் கவனியாமல் வேசியிடம் சென்று ரமித்தான். மறுநாள் காலையில் தன் வீட்டிற்கு வந்தான். அவனது தாய் அன்புடன் வரவேற்று வயதான பெற்ருேரை அலையவைத்தாயே? உன் தந்தை எங்கு சென்ருர்.

தேடிவா என்றாள். குடிமயக்கத்தால் தடிகொண்டு கிழத் தாயைத் தாக்கினான். அவளும் அந்த க்ஷணத்திலேயே உயிர் துறந்தாள். அதையும் கவனியாமல் வீட்டில் இருந்த பொருளை எடுத்துக்கொண்டு தாஸிவீடுசென்றான். பந்துக்களும் ஊராரும் ஒன்று கூடி அவனது பெற்றோர் உடலுக்குத் தீயிட்டனர். அதற்காகவும் அவன் வருந்த வில்லை. தீயகார்யத்திலிருந்து திரும்பவுமில்லை.

ஸாவித்ரி ஒருநாள் அவன் திருவடியில் விழுந்து வேண்டினாள். ப்ராணநாத! உயர்ந்த பிராம்மண குலத்தில் பிறந்தீர். உத்தம ஆசாரத்தைக் கைக்கொள்ளக் கூடாதா? உயர்பிறவி மறுபடி கிடைக்குமா? பரலோகத்திற்கு வேண்டியதை இப்பிறவியிலேயே செய்ய வேண்டாமா? சிற்றின்பத்தை அளிக்க யான் ஸித்தமாக இருக்கின்றேன். பெற்றோரைக் கொன்று கவனியாதது குடியாலன்றோ? குடியையும் வேசியையும் விடுங்கள். உங்களைப்பற்றி பிறர் கூறும்போது வெட்கித் தலைகுனிந்து நிற்கிறேன் நான் என்றாள். இதைக்கேட்டு கடுங்கோபங் கொண்டான். அக் கிழங்கள் சென்ற இடத்திற்கே உன்னையும் அனுப்புகிறேன் என்று அவளையும் தடியால் அடித்துக் கொன்றான். அவள் ஸ்வர்க்கம் சென்றாள்.

சிலநாள் சென்றபின் புதன் காலபி என்ற முனிவரது ஆஶ்ரமத்திற்குச் சென்றான். முனிவர் வெளியில் சென்று இருந்தபொழுது அவரது பத்நியான ஸுலபா என்பவளைப் பலாத்காரம் செய்தான். அவள் நீ குஷ்டரோகியாகி வேசிமகனாவாய் என்று சபித்தாள். புதன் இறந்தபின் ஒரு கல்பகாலம் வரை பற்பல கொடிய நரகங்களை அனுபவித்தான். உமது நாட்டிலே வேசிமகனாகப் பிறந்தான். குஷ்டரோகியைக் கண்டால் உடனே ஸ்நாநம் செய்யவேண்டும். அவனால்தான் விமாநம் மேலே செல்ல வில்லை. அவனைக் கீழே இறக்கும் என்றும் கணேச தூதர்கள் கூறினார்கள். அரசன் அவர்களைப் பணிந்து இவனும் நற்கதி பெற்று விமாநத்தில் வர ஒரு உபாயம் கூறுங்கள் என்றான். பகவானது நாமாக்களில் மிகச் சிறந்ததான கஜாநந என்ற மஹா மந்த்ரத்தை அவனது வலது காதில் உபதேசி என்று தூதர் கூற அரசன் அங்ஙனமே கூறினான். தத்க்ஷணமே அந்நோய் மாயமாய் மறைந்தது. அனைவரும் விமாநத்திலேறி சென்றனர்.

## பரசுராமர் கணேசரை உபாஸித்தது.

ப்ரும்மா வேதவ்யாஸருக்குக்கூறினர். க்ருதவீர்யனது புத்ரன் கார்த்தவீர்யன் கை கால்களில்லாமல் இருந்து கணேசர் அருளால் ஆயிரம் கரம் பெற்றனல்லவா? அவனை ஜயிக்க பரசுராமர் விநாயகவிரதத்தை அநுஷ்டித்தார். ஶ்வேதத்வீபத்தில் ஜமதக்நி என்றோர் மஹர்ஷி இருந்தார். அவர் மஹா தபஸ்வீ. அவர் மனைவி ரேணுகா தேவீ. இருவரும் இல்லற அநுஷ்டானத்தை உலகம் போற்றும் வகையில் செய்தனர். எண்ணிறந்த மாணவர் அவரிடம் வேதசாஸ்த்ரம் பயின்றனர். ஒருநாள் கார்த்த வீர்யன் வேட்டையாடிக்கொண்டு ஜமதக்நியின் ஆஶ்ரமத்தின் அருகே சென்றான். அதிமதுரமான வேதத்வநி மன்னன் செவியில் புகுந்து பரவசப்படுத்திற்று. விநய வேஷத்துடன் ஆஶ்ரமஞ் சென்று முநிவரைப் பணிந்து போற்றினன். ரிஷியும் வேந்தனை வரவேற்று குசல ப்ரஶ்நம் செய்தார். அர்க்யம் பாத்யம் முதலியன அளித்து அமாத்யருடன் அரசனை உபசரித்தார். மன்னனும் முநிவரைப் பணிந்து தன் நாடு செல்ல உத்தரவு கேட்டான். இது சாப்பாட்டு வேளையாதலால் விருந்தினருக்கு விருந்தளிப்பது என் கடமை. உமது பரிவாரத்துடன் இருந்து விருந்தை ஏற்று செல்லலாம் என்றார் ரிஷி. ஸேனையிலுள்ளவரை விட்டு நாங்கள் மாத்ரம் உண்பது உசிதமல்ல. அவர்களுக்கும் உணவளிக்கும்படி ஆஶ்ரம வாஸிகளைக் கேட்பதும் நியாயமல்ல.

உத்தரவளியும் என்றான் கார்த்த வீர்யன். அரசே! நீர் அஞ்சவேண்டாம். அனைவர்க்கும் அவரவருக்கேற்ற வகையில் விருந்தளிப்போம். ஸ்நாநம் செய்துவாருங்கள் என்றார் முநிவர். இவர் எப்படி உணவளிப்பார்? ஆயினும் அவர் சொல்லைத் தட்டலாகாது. பார்ப்போம் என வேந்தன் ஸ்நாந அநுஷ்டாநங்களை முடித்து வந்தான். அதற்குள் தனது காமதேனுவை அழைத்து அரசனுக்கேற்ற வகையில் அனைவர்க்கும் அன்னமளிக்க வேண்டுமென்றார் ஜமதக்நி. காமத்தைத் தருவது காமதேநு அல்லவா? இவரது தவத்தை மெச்சி சக்ரனல் வெகுமதியாக அளிக்கப்பட்டது அது. உடனே தனது மஹிமையால் அழகிய அரண்மனை, போஜநசாலை, அறுசுவையுடன்

கூடிய அமிருதம் போன்ற அமுது, அதை வழங்க அப்ஸரஸ் போன்ற ஸ்த்ரீகள் ஆகிய அனைத்தையும் படைத்தது காமதேநு அவரவருக்கேற்ற அன்னம்! அமிருதத்திலும் இனிய பக்ஷ்ய போஜ்யங்கள்! இதுவரை மன்னனும் மற்றோரும் சுவைக்காத ருசி! இனிய கனி வர்க்கம்! உயர்ந்தபாநம்!

உணவின் குணம் மணம் எல்லோருக்கும் பேராநந்த மளித்தது. வயிற்புடைக்க புஜித்தனர். பரிமள தாம்பூலம், படுக்க உயர்ந்த மஞ்சம், ஹம்ஸ தூலிகா சயநம், ஆஹா! என்ன ஆச்சர்யம். காநகமது, ஒருவித ஸாதந முமில்லா அரண்யம். எப்படி இவ்வளவு மேன்மையான விருந்தளித்தார்? சக்ரவர்த்தியான நம்மாலும் ஆகாதபடி யல்லவோ செய்தார் முநிவர்! என யோசித்தான் மன்னன். காமதேநுவே காரணமென உணர்ந்தான். மஹர்ஷே! உமக்கு எதற்கு இது! நாட்டிலே அரசர்க்கல்லவோ வேண்டியது இந்த காமதேனு. இதற்கு ஈடாக சிலபசுக் களைப் பெற்று நம்மிடம் ஒட்டிவிடுங்கள் இதை என் றான் வேந்தன்.

அரசே! பசித்தவன் உணவுக்குப் பாத்ரமென்பது உண்மை. பாத்ரமறிந்து பிக்ஷை இடு என்பது அதனி லும் சிறந்த உண்மை என உம்மாலறிந்தேன். ஆஹா! விரும்பத்தகாததை விரும்பினாய்! இவ்வளவு அயோக்யன் என முன்னம் நான் உன்னை அறியவில்லை. மூவுலகை யும் கொன்ற பாபம் உன் தலைமீது சுமந்தது என்றார் தவஸி. கடுங்கோபங்கொண்ட மன்னன் சீறி எழுந்தான். இதுவரை யான் இத்தகைய கொடிய சொற்களைக் கேட்ட தில்லை! நீர் பிராம்மணன் ஆனதால் பொறுத்தேன். தூதர்காள்! அவர் கடக்கட்டும். பசுவைப் பிடித்து வாருங்கள் என்றான். கிங்கரர் அப்பசுவின் அருகே போனவுடன் அதன் உடலிலிருந்து கிளம்பிய சப்தத் தால் அனைவரும் இறந்தனர். அரசன் சதுரங்க ஸேனையும் அநுப்ப தேநுவின் உடலிலிருந்து உண்டான ஶகர், பர்பரர், படச்சார், யவநர் முதலிய பல வீரர்கள் தோன்றி அனைவரையும் அழித்தார்கள். அரசன் தடிகொண்டு தாக்கினான்.

நீ பிராம்மணனல்ல. கபடீ, என்று கூறி ஆயிரங்கரங்களாலும் ஸரத்தை எறிந்து பசுவையும் முநிவரையும் தாக்கினான். இதைக்கண்ட ரேணுகாதேவி ஐயோ! ராமா! எங்கு சென்றாய்? உனது தந்தையைப் பாவி கொல்கிறானே! என்று கதறினாள். அரசனது கூறிய ஸரம் முநிவர் பிராணனைக் கொண்டு சென்றது. காமதேனுவும் இனி இங்கென்ன வேலை? என ஸ்வர்க்கம் சென்றது. தாய் அழைத்தது ராமனது உள்ளத்தில் கேட்டு ஓடி வந்தான். தந்தை பாணத்தாலடிபட்டு இறந்ததையும் தாய் மீது இருபத்தோருபாணம் வீழ்ந்திருப்பதையுங்கண்டான். உயிர்போகும் தருவாயிலுள்ள தாயை மடிமீதுவைத்து என்ன நடந்ததென விசாரித்தான். பிரும்மஹத்தி செய்யாதே என்று கூறிய தன்மீதும் இருபத்தோரு ஸரங்களையும் விட்டதைக்கூறி, இருபத்தோரு தலைமுறை பாபிகளைக்கொல், ஒருவரையும் கொளுத்தாத இடத்தில் எங்களைக் கொளுத்து. தத்தாத்ரேய முநிவரை அடுத்து அவர் கூறியபடி கர்மாக்களைச் செய். அவர் அருளால் உனது கார்யம் பூர்த்தியாகும் என்றுகூறி உயிர் துறந்தாள். மாத்ரு பித்ரு ஸோகத்தினால் கதறி அழுது இரு உடல்களையும் சேர்த்து விதிப்படி தஹநம் செய்தான். அன்றும் மறுநாளும் செய்ய வேண்டிய கர்மாக்களைச் செய்து முடித்தான். தாய் சொன்னபடி தத்தாத்ரேய முநிவரைத் தேடிச் சென்றான். அவர் விகாரமான வேஷத்துடன் ஸிஷ்யர்கள் சூழ நாயைப்பிடித்துக் கொண்டு பித்தனைப்போல் திரிந்தார். க்ஞாநக்கண்ணால் இவர்தான் அவர் என அறிந்து அவர் திருவடிகளைச் சரணமடைந்தான். நடந்த வரலாற்றையும் தாயின் விருப்பத்தையும் கூறினான்.

பதிமூன்று நாட்கள்வரை ப்ரேத கார்யங்களைச்செய்து பின்னர் செய்யவேண்டிய கார்யங்களைச் செய்யலாம் என்று சென்றார். ஐந்தாவது நாள் கர்மாவைச்செய்து விட்டு வரும்போது ராமன் வழியில் ஒரு புலியைப் பார்த்து பயத்தினால் அம்மா! அம்மா! என்று அலறினான். உடனே ரேணுகையின் முகம்மாத்ரம் அவனருகே வந்தது. புலி ஓடிவிட்டது. உடலில்லா தாயைக் கண்டு பயந்தான் ராமன். குழந்தாய்! பத்து நாட்களும் விதிப்படி பிண்டமளித்தால்தான் இந்த சரீரம் பூர்ணமாகும்.

இடையே நீ என்னை அழைத்தாய். இதுவரை செய்த பிண்ட தானத்தால் எனது முகம் மாத்ரமே உருவாயிற்று என்று கூறி மறைந்தாள் ரேணுகை.

தத்தாத்ரேயரும் அவனிடம் வந்து இதையே ஆமோதித்து பதிமூன்று நாட்களிலும் கர்மாக்களைச் செய்யும்படி கூறினர். மிக ஶ்ரத்தையுடன் ராமன் பெற்றோருக்கு மருமைக்கடனைச் செவ்வனே செய்துமுடித்தான். ஜமதக்நி பிரும்மலோகம் சென்றார். ரேணுகை முகமாத்ரமுள்ளவளாக பூலோகத்தில் ஆங்காங்கு வஸிக்கிருள். ராமன் தாயை நினைத்து. தாயே தேவரும் அஞ்சும்படியான பராக்ரமமுள்ளவனும் ஆயிரங்கையுள்ளவனுமான கார்த்தவீர்யனை எப்படிக் கொல்வது? என்று வருந்தினன். ரேணுகை அவனெதிரில் தோன்றி அஞ்சாதே. நீ விஷ்ணுவின் அம்சமல்லவா? கைலாஸம் செல். பரமசிவனை வணங்கித்துதி. அவர் வழிகூறுவார் என்றாள்.

ராமன் கைலாஸம் சென்று நந்தியை வணங்கி உள்ளே சென்றார். கைலாஸநாதனைக் கண்டு அவர் திருவடியில் வணங்கித் துதித்தார். அவர் உனக்கு யாது வரம் வேண்டுமென்றார். ராமன் தனது கோரிக்கையைக் கூறி அதற்கு அருள் புரியவேண்டுமென்றார். பரமசிவன் விநாயகரது ஷடக்ஷரீ மந்த்ரத்தை உபதேசித்தார். முறைப்படி ஜபம், தர்ப்பணம், ஹோமம், விரதம் முதலியன செய்துவர ஸகல விதமான இஷ்டத்தையும் பெறலாம் என்றார். கிருஷ்ணா நதியின் உத்தரக்கரையில் ஆஶ்ரமத்தை அமர்த்திக்கொண்டு ராமன் ஏகாக்ர சித்தனாக இருந்து லக்ஷம் முறை மூலமந்த்ரத்தை ஜபித்தார். அதில் பத்திலொரு பங்கு தர்ப்பணமும் அதில் பத்தில் ஒரு பங்கு ஹோமமும் அதில் பத்தில் ஒரு பங்கு பிராம்மண போஜநமும் செய்துவைத்தார். ஷோடஶோபசார பூஜையும் செய்தான் ராமன்.

விநாயகர் நாலு கரங்களுடனும் பரசு கமலம் அங்குஶம் முதலியவைகளை ஏந்தி மிகப்ரகாஶமான தேஜோ ரூபமுள்ளவராகத் தோன்றினர். ராமன் அவர் திருவடியில் அடியற்ற மரம்போல் விழுந்து எழுந்து பக்தியுடன் ஸ்தோத்ரம் செய்தார். விநாயகர் ஸந்தோஷமடைந்து உனக்கு என்னவரம் வேண்டுமென்றார். ராமன்

யாதொரு வரமும் வேண்டேன். தங்களது திருவடியில் அசஞ்சலமான பக்தியே வேண்டுமென்ருன். கணேஶர் ராமன் எதற்காக இதைச்செய்தான். என உணர்ந்து தன்னிடமுள்ள பரசுவைக் கொடுத்து இன்று முதல் நீ பரசுராமன் என அழைக்கப்படுவாய். உனது தாய் கூறிய படி கார்த்த வீர்யனைக் கொன்று இருபத்தோரு தலை முறை பாபிகளைக் கொல்வாய் என்று கூறி மறைந்தார். பரசுராமன் அவ்விடத்தில் ஒரு மஹாகணபதி விக்ரஹத் தைப் பிரதிஷ்டை செய்தார்.

தன்னிருப்பிடம் வந்து தந்தை தாய்களைக் கொன்ற கார்த்த வீர்யனுடன் போர் செய்து அவனது ஆயிரம் கரங்களையும் வெட்டி அவனைக் கொன்ருர். இருபத்தோரு முறை பாபிகளைக் கொன்று ஒரு யாகம் செய்தார். ஸகல பூமியையும் பிராம்மணர்களுக்குத் தாநம்செய்தார். விஷ்ணுவின் அம்சமான அவரை எல்லோரும் பூஜித்தனர்.

## ஸ்கந்தன் மயூர வாஹநம் பெற்றது.

பரசுராமர் எங்கிருந்து தவம் செய்தார்? என்று வ்யாஸர் கேட்க பிரும்மா கூறினர். மயூரேஶ்வரம் என்ற க்ஷேத்ரத்தில் தவம் செய்தார். அங்கு விநாயகர் மயூர வாஹநத்துடன் தோன்றிஞர். கமலாஸுரன் என் பவனைக் கொன்ருர். ஸ்கந்தனுக்குத் தாரகனை வதம் செய்வதற்காகத் தனது வாஹநத்தை அளித்தார். அத ஞல் அவ்விடம் மயூரேஶமாயிற்று.

தாரகன் எனும் அஸுரன் ஆயிரம் ஆண்டுகள் கடுந் தவம் செய்து சிவனது ஶக்தியால் உண்டாகும் சிவகுமார னைத் தவிர மற்றவரால் மரணமில்லை என வரம்பெற்ருன். அஸுர ஸ்வபாவத்திற் கேற்றபடி இந்திரனை ஜயித்து ஸ்வர்க்கத்தை அபஹரித்தான். திக்பாலர் அவனுக்கு ஒரு த்ருணம் போன்றவர். மற்ற அனைவரையும் ஜயித்து வைகுண்டம் சென்ருன். மஹா விஷ்ணு அதை விட்டு பாற்கடலுக்கு வந்தார். கைலாஸம் சென்ருன் தாரகன். பரமசிவன் அதைவிட்டு ஒரு குஹையில் புகுந்தார். தேவர்களையும் வேதமோதும் ரிஷிகளையும் ஹிம்ஸித்தான். அனைவரும் ஒன்றுகூடி சிவனைத் துதித்தனர். அவர் அஶரீரியாக இருந்து விரைவில் நமது குமாரன் அவனைக்

கொல்வார் என்ருர். சிவனைத் தர்சிக்க முடியாததால் பார்வதீ தேவியைச் சரணமடைந்து துதித்தனர்.

தேவர்களது நிலையைக்கண்டு வருந்தி கருணாமூர்த்தியான தேவி, பகவான் தக்ஷிணாமூர்த்தியாக இருந்து கடுந் தவம் செய்கிருர். நான் ஒரு வேடஸ்த்ரீ உருவங்கொண்டு அங்கு செல்கிறேன். நீங்களும் அங்கு வாருங்கள். விரைவில் உங்கள் கஷ்டம் நீங்குமென்ருள். அப்ஸரஸ்ஸுகளும் வெட்கமடையும்படியான மிக அழகிய ரூபமெடுத்தாள். ஏகாந்த நிஷ்டையிலிருந்து அருகில் வந்தவர்களைக் கண்ணெடுத்தும் பாராமலிருந்தார் சிவன். இதைக் கண்ட தேவி மன்மதனை அழைத்து அவனது புஷ்பக்கணையைச் சிவன் மீது விடும்படி கூறினுள். மன்மதன் தேவர்கள் கூறியபடி வஸந்த ருதுவை ஸஹாயமாகக் கொண்டு சிவனிடம் வந்தான். எங்கும் மரங்கள் புஷ்பித்து ஒரே வாஸனை! மந்தமாருதம்! சந்திரிகை! இவைகள் சிவனது தியாநத்தைக் கலைத்தன.

இதே தக்க ஸமயமென மன்மதன் ஒரு புஷ்ப பாணத்தை ஏவினுன். அவரது மநம் கலங்கி தவம் அகன்று சிருங்காரத்தில் சென்றது. இது யாருடைய செயல்? என நெற்றிக்கண்ணைச் சிறிது திறந்துபார்த்தார். அங்கிருந்து வந்த ஜ்வாலையைக்கண்டு நடுங்கி காமன் தேவர்களே! வந்தது ஆபத்து என்று கதறினுன். அவன் உடல் ஒரு நிமிஷத்தில் சாம்பலாகிற்று. தாபம் அனைவரையும் தஹிக்க தேவர்கள் பரமசிவனைச் சரணமடைந்து எங்களது அபசாரத்தை க்ஷமித்து எங்களைக் காக்க வேண்டும் என பிரார்த்தித்தனர். தாபத்தை அகற்றி வேடஸ்த்ரீ வடிவமுள்ள பார்வதியை மடிமீது வைத்துக் கொண்டு விருஷபாரூடராகக் கைலாஸம் சென்ருர் பரமசிவன். தேவி இதுவரை சிவனை விட்டுப் பிரிந்த தாபத்தால் பரம துக்கமடைந்தாள். சிவன் தேவியை ஏகாந்தமான இடத்தில் அழைத்துச் சென்று அவளை ஸந்தோஷப்படுத்தினுர். அறுபது ஆயிரம் ஆண்டுகள் இருவரும ஏகாந்தமாக ரமித்துக் கொண்டிருந்தனர்.

தேவர்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து சிவனது அஷ்ட மூர்த்திகளில் ஒன்ருன அக்நியைத் துதித்து பார்வதி பரமேஶ்வரர்கள் ஸ்கந்தனை உண்டுபண்ணும்படிச் செய்ய

வேண்டினர். அக்நி காஷாயமணிந்து பிராம்மண வேஷங் கொண்டு ஆதிதம்பதிகள் உள்ள இடத்திற்குச் சென்று மூன்று முறை உரக்க பவதி பிக்ஷாம் தேஹி என பிக்ஷை கேட்டார். தேவி எழுந்து வந்து உமக்கென்ன பிக்ஷை வேண்டும் என்றாள். அக்நி ஶிவஶக்தியைத் தனக்குத் தந்தருள வேண்டுமென்றார். அங்ஙனமே ஆகட்டும். ஆனால் அதைப்பூமியில் சிந்தினால் அது உலகைத்தஹித்து விடும் என்றுகூறி அக்நியின் கையில் அளித்தாள். அக்நி உடனே அதை அருந்த அவர் கர்ப்பமாகி விட்டார். வெட்கத்தினாலும் தாபத்தினாலும் அவர் ஆங்காங்கு அலைந்து கங்கையில் விட்டுவிட்டார் அதை. க்ஷட்கிருத்தி கைகள் ஆங்கு வந்து ஸ்நாநம் செய்து தங்கள் வீட்டிற்குத் திரும்பினர். அவர்களது புருஷர்கள் இவர்கள் கர்ப்பிணி களாக இருப்பதைக்கண்டு ஆஶ்சர்யமடைந்தனர். அவர் கள் கூறியபடி இந்த ஶக்தியை ஸ்த்ரீகள் கங்கையிலுள்ள ஶரவணத்தில் அந்த கர்ப்பத்தை விட்டுவந்தனர்.

அந்த கர்ப்பம் ஆறு குழந்தைகளாகத் தோன்றி ஹூம் என்று சப்தம் செய்தது. அதனால் பூமி அசைந் தது. அச்சமயம் எல்லா மரங்களும் பூத்தன. தேவ துந்துபி முழங்கிற்று. புஷ்ப வர்ஷம் வர்ஷித்தது. க்ஞாநதிருஷ்டியால் இதை அறிந்த சிவன் தேவியுடன் கைலாஸம் சென்றார். நாரதர் அங்கு சென்று தேவி யிடம் உமது குமாரன் கங்காதீரத்தில் உதயமாகி இருக் கிறார் என்றார். தேவி சிவனுடன் அங்கு வந்து ஜோதிர் மயமான குழந்தையைக்கண்டு ஆநந்தித்தாள். அங்கு அக்நியும் கங்கையும் கிருத்திகைகளும் இவர் என் புத்ரன் என் புத்ரன் என்றனர். தேவி அக்குழந்தையை மடியில் எடுத்துக்கொண்டு கைலாஸம் சென்றாள். குழைந்தைக்கு ஸ்கந்தன் ஶரவணபவன் கார்த்திகேயன் முதலிய பெயர் களை வைத்து தேவி அன்புடன் அவரை வளர்த்து வந் தாள். ஒருநாள் குஹன் தந்தையை வணங்கி உலகில் ஸர்வ ஶத்ருக்களையும் ஜயிக்கக்கூடியதும் புக்தி முக்தி களைத் தருவதுமான விரத மொன்றைக்கூற வேண்டும் எனபிரார்த்தித்தார்.

அலக்ஷ்மீ ஸங்கட ஹர சதுர்த்தீ விரதமே நீ கேட்டபடி ஸகல ஸம்பத்தையும் தரவல்லது என்றுகூறி அந்த

விரதமநுஷ்டிக்க வேண்டிய விதியையும் விஸ்தாரமாக உரைத்தார். கணேச ஷடக்ஷரீ மந்த்ரத்தையும் உபதேசித்தார். ஸுப்ரமண்யன் இரவும் பகலும் விநாயகரை த்யாநம் செய்து அந்த விரதத்தை நன்கு அநுஷ்டித்தார். ஒருவர் கண்ணுக்கும் அகப்படாத கணேசன் குஹன் எதிரேதோன்றி தாரகன் முதலிய ஸகல அரக்கர்களையும் கொன்று போரில் வெற்றி பெறுவாய் என தனது மயில் வாஹனத்தை அளித்து அருள் புரிந்தார். ஸ்கந்தனும் கண்ணுக்குப் புலப்பட்டதால் லக்ஷ்ய விநாயகர் என்ற பெயருள்ள ஒரு கணேச மூர்த்தியை ஆங்கு ப்ரதிஷ்டை செய்தார். தனது மயில் வாஹநத்தை அளித்து த்வஜமாகவும் அதை அமர்த்தி மயூரத்வஜன் என ஸ்கந்தனுக்கு விநாயகர் பெயரிட்டார். ஸேநாபதியாக அபிஷேகம் செய்யப்பட்ட ஸ்கந்தன் லக்ஷ வர்ஷங்கள் தாரகனுடன் யுத்தம் செய்து அவனைக்கொன்ருர். மிக ஆச்சர்யமான அந்தப் போரை வர்ணிக்க ஆயிரம் நாவுபடைத்த ஆதி சேஷனுலும் இயலாது.

## ரதியின் பூஜையால் மன்மதன் உடல் பெற்றது.

பரமசிவனது நெற்றிக்கண்ணுல் மன்மதன் சாம்பலானுன் அல்லவா ? இந்த துக்கத்தால் ரதி பரமசிவனையே வணங்கிப் போற்றி கதறினுள். கருணுமூர்த்தியான சிவன் நீ நினைத்தபோது மன்மதன் உன்னிடம் வருவான். ஆனுல் பிறர் கண்ணில் அங்கமில்லாதவனுகவே காணப்படுவான். நீண்டநாள் சென்றபின் லக்ஷ்மியிடம் புத்ரனுகப் பிறப்பான். ப்ரத்யும்நன் என்ற பெயருடன் விளங்குவான் என்ருர். அங்ஙனமே ரதி தேவி அநங்கன், மந்ஸிஜன் என்ற பெயருள்ள பதியைப் பெற்று மகிழ்ந்தாள். என்ருலும் ஸதிபதிகளாக அமர ஸபையில் முன்போல் செல்லமுடியாததால் மறுபடியும் சிவனை நாடி இருவரும் தவம் செய்தார்கள். பகவான் பிரத்யக்ஷமாகி விநாயகருடைய ஏகாக்ஷர மந்த்ரத்தை உபதேசித்து அவரை ஆராதிக்கும்படி கூறினுர். ரதி நூருண்டுகள் அன்ன ஆகாரமின்றி ஏகாக்ர சித்தமாக கணேசனை நாடிக் கடுமையாகத் தவம் புரிந்தாள். திவ்ய அலங்காரத்துடன் பத்துகைகளில் பத்து வகையான ஆயுதங்களேந்தி ஸிந்தூரவர்ணத்துடன் கணேசன் அவள் முன் தோன்றி காட்சி அளித்தார்.

# ஸாமவேத ஸந்த்யாவந்தனம்.

[பலர் பல நாட்களாக வேண்டியபடி, மூலம் பூர்ணமாகவும் அர்த்தம் யஜுஸ் ஸந்த்யையில் விரிவாக இருப்பதால் சுருக்கமாகவும் வெளிவரும். வேத மந்த்ரம் மாத்ரம் நாகரத்திலும் தமிழிலும், மற்றவை தமிழிலும் வரும். கவனிக்கவும்.]

**ஆசமநம்:** அச்யுதாய நம: அநந்தாய நம: கோவிந்தாய நம: கேஶவ, நாராயண, மாதவ, கோவிந்த, விஷ்ணோ, மதுஸூதந, த்ரிவிக்ரம, வாமந, ஸ்ரீதர, ஹ்ரிஷீகேஶ, பத்மநாப, தாமோதர.

**ஸங்கல்பம்:**

ஶுக்லாம்பரதரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்புஜம் ।
ப்ரஸன்ன வதநம் த்யாயேத் ஸர்வவிக்நோப ஶாந்தயே ॥

ओं भूः ओं भुवः ओँसुवः ओं महः ओं जनः ओं तपः ओँ सत्यं । ओं तत्सवितुर्वरेण्यं । भर्गो देवस्य धीमहि । धियो योनः प्रचोदयात् । ओमापो ज्योती रसोऽमृतं ब्रह्म भूर्भुवस्सुवरोम् ।

ஓம் பூ: ஓம் புவ: ஓகும் ஸுவ: ஓம் மஹ; ஓம் ஜந: ஓம் தப: ஓகும் ஸத்யம் ஓம் தத்ஸவிதுர் வரேண்யம் । பர்கோ தேவஸ்ய தீமஹி । தியோ யோந: ப்ரசோதயாத் । ஓமாபோ ஜ்யோதீ ரஸோம்ருதம் ப்ரும்ம பூர்புவஸ் ஸுவரோம் ॥

மமோபாத்த ஸமஸ்த துரித க்ஷயத்வாரா ஸ்ரீ பரமேஶ்வர ப்ரீத்யர்த்தம் ப்ராதஸ் ஸந்த்யாம் உபாஸிஷ்யே ।
**மாத்யான்னிகத்தில்**—மாத்யான்ஹிகம் கரிஷ்யே ।
**ஸாயங்காலம்**—ஸாயம் ஸந்த்யாம் உபாஸிஷ்யே ।

[**கருத்து** – பகவன் நாமாவைக்கூறி 3 முறை ஜலமருந்தி 12 நாமாக்களைக் கூறி ஜலத்துடன் அவயவங்களைத் தொட்டு ஶரீர சுத்தி செய்வது ஆசமநம். விக்நம் வராமலிருக்க வெண்மை வஸ்த்ரமணிந்தவரும் எங்குமுள்ளவரும் சந்த்ர வர்ணமுள்ளவரும் நாலுகர முள்ளவருமான யானைமுகத்தானை த்யாநம் செய்கிறேன்]

---

**அதில் ஸத்யபுத்தி தர்மபுத்தி உண்டாகக்கூடாது.**

[ப்ராணயாமம்: பூமிமுதல், லோகவடிவனும் உலகைப்படைப்பவனுமான பகவானது உயர்ந்த தேஜஸ்ஸை த்யாநம் செய்கிறேன். அவர் எனது புத்தியைத் தூண்டுபவர். பிரணவம் நீர் அக்நி ரஸம் அமிருதம் 3 வியாஹ்ருதி இந்த வடிவனுகவும் உள்ளவர் ப்ரும்மம். **ஸங்கல்பம்:** நான் தேடிய ஸகல பாபங்களும் ஒழியும் வகையால் ஸ்ரீ பரமேச்வரன் பிரீதிக்காக ஸந்த்யாவந்தநம் செய்கிறேன்.]

அபவித்ர: பவித்ரோவா ஸர்வாவஸ்தாம் கதோபிவா
யஸ்மரேத் புண்டரீகாக்ஷம் ஸபாஹ்யா ப்யந்தர: ஶுசி:
ஸ்ரீ கேஶவாய நம:

**आपो हिष्ठा मयो भुवः। तान ऊर्जे दधातनः। महे रणाय चक्षसे। योव शिवतमो रसः। तस्य भाजयतेहनः। उशतीरिव मातरः। तस्मा अरङ्गमाम वः। यस्य क्षयाय जिन्वथ। आपो जनयथाचनः। ओं भूर्भुवस्सुवः। तरत्स मन्दी धावति धारासुतस्यान्धसः। तरत्समन्दी धावति। उस्रा वेद वसूनाम्। मर्त्यस्य देव व्यवसः। तरत्स मन्दी धावति। ध्वस्रयोः पुरुषन्त्योः। अ सहस्राणि दद्महे। तरत्स मन्दी धावति। आ ययो स्त्रिंशतं तना। सहस्राणिच दद्महे। तरत्स मन्दी धावति। ओं भूर्भुवस्सुवः।**

ஆபோஹிஷ்டா மயோ புவ: । தாந ஊர்ஜே ததாதந: மஹே ரணாய சக்ஷஸே । யோவஶ் ஶிவதமோ ரஸ: । தஸ்ய பாஜயதே ஹந: । உஶதீரிவ மாதர: । தஸ்மா அரங்கமாமவ: । யஸ்ய க்ஷயாய ஜின்வத । ஆபோ ஜநயதா சந: । ஓம் பூர்புவஸ் ஸுவ: । தரத்ஸமந்தீ தாவதி தாராஸுதஸ்யாந்தஸ: தரத்ஸமந்தீ தாவதி । உஸ்ரா வேதவஸூநாம் । மர்த்யஸ்ய தேவ வ்யவஸ: । தரத்ஸ மந்தீ தாவதி । த்வஸ்ரயோ: புருஷந்த்யோ: । ஆஸஹஸ்ராணி தத்மஹே । தரத்ஸமந்தீ தாவதி । ஆயயோஸ்த்ரிம்ஶதம்தநா । ஸஹஸ்ராணிச தத்மஹே । தரத்ஸமந்தீ தாவதி । ஓம் பூர்புவஸ் ஸுவ: ।

---

(இவைகளைக் கூறி தலையில் ப்ரோக்ஷித்துக்கொள்க) யஸ்ய க்ஷயாய என்பதால் மாத்ரம் காலில் ப்ரோக்ஷிக்கவும்.

[ஸுகமளிக்கும் ஜலதேவதையே! பிரகாசமாக அதிக அறிவு உண்டாக எங்களுக்கு அன்னரஸத்தைத் தாரும். தாய் குழந்தைக்கு அளிப்பது போல் மிக்க ரஸமுள்ளதை அளியும். ஸ்திரமான ரஸத்தைநாடி உம்மை அடைகிறோம். நற்பிறவி உள்ளவர்களாகச் செய்யும்.

தேவர்க்கு இன்பம் தரும் ஸோமரஸம் பாபத்தை நீக்கி சுத்தமாக்குகின்றது. கொடியிலிருந்து பிழியப்பட்டு தேவர்க்கு அன்னமாக இருக்கும் ஸோமரஸத்தின் தாரை பாபத்தை அகற்றிச் சுத்தமாக்குகிறது. தநத்தைத்தரும் ஸோமரஸத்தின் தாரை நம்மைச் சுத்தமாக்குகிறது. த்வஸ்ர புருஷந்தீ என்ற அரசரின் ஆயிரக்கணக்கான தநத்தைப் பெற்ற எங்கள்பாபத்தை அகற்றி சுத்தமாக்கட்டும். ஷி ராஜாக்களிடமிருந்து முந்நூறு ஆயிரக்கணக்கான வஸ்த்ரங்களைப் பெற்ற எங்களைச் சுத்தமாக்கட்டும். ஸோமயாகத்தில் ஸோமலதையிலிருந்து பிழிந்த ரஸம் தேவர்க்கு ஆநந்தம்தரும். பாவநமாக்கும்.—அதுபோல் ப்ரோக்ஷித்துக்கொள்ளும் ஜலதேவதையை வேண்டுகிறோம். குறித்த அரசரிடம் பெற்றது போல் துஷ்பிரதி க்ரஹமாக நமக்குக் கிடைத்த பொருள் மூலமாய் வந்த பாபத்தை அகற்ற வேண்டுகிறோம்.]

அஹஶ்ச மா ஆதித்யஶ்ச புநாது ஸ்வாஹா.

இதைக்கூறி ஆசமநம் போல் ஒரு முறை தீர்த்தம் அருந்துக. பகல் தேவதையும் ஆதித்யனும் என்னைப் பாவநமாக்கட்டும்.

**மாத்யான்ஹிகத்தில்.**

**आपः पुनन्तु पृथिवीं पृथिवी पूता पुनातुमां। पुनन्तु ब्रह्मण स्पतिर्ब्रह्म पूता पुनातु मां। यदुछिचष्टमभोज्यं यद्वा दुश्चरितं मम। सर्वं पुनन्तु मामापोऽसतांच प्रतिग्रहँस्वाहा॥**

ஆப: புநந்து ப்ருதிவீம் ப்ருதிவீ பூதா புநாதுமாம்। புநந்து ப்ரஹ்மணஸ்பதிர் ப்ரஹ்மபூதா புநாதுமாம்। யதுச்சிஷ்ட மபோஜ்யம் யத்வா துஶ்சரிதம் மம। ஸர்வம் புநந்து மாமாபோ஽ஸதாஞ்ச ப்ரதிக்ரஹँஸ்வாஹா॥

---

**மநிதனிலும் சிறந்த தேவ தர்மத்திற்கு வழிதேடவேண்டும்**

[ஜலதேவதை எனது ஸ்தூல ஸூக்ஷ்ம ஶரீரங்களைச் சுத்தமாக்கட்டும். வேதபதியான பகவானும் வேதமும் என்னைச் சுத்தமாக்கட்டும். எச்சில், உண்ணத் தகாதது இவைகளை உண்ட தோஷம், தீயச்செயல், அஸத்துக்களிடம் தானம் வாங்கியது ஆகிய ஸகல தோஷங்களையும் அகற்றி சுத்தமாக்கட்டும்.]

**ஸாயங்காலத்தில்:**– ராத்ரிஸ்ச மா வருணஸ்ச புநாது ஸ்வாஹா |

[ராத்ரியும் வருணனும் என்னைச் சுத்தமாக்கட்டும்.]

**दधिक्राविण्णो अकार्षं। जिष्णो रश्वस्य वाजिनः। सुरभिनो मुखाकरत्। प्रण आयूंषि तारिषत्। आपोहिष्ठा मयोभुवः...... आपो जनयथाचनः। ओं भूर्भुवस्सुवरोम्।**

ததிக்ரா விண்ணோ அகார்ஷம் | ஜிஷ்ணோ ரஶ்வஸ்ய வாஜிநः | ஸுரபிநோ முகாகரத் | ப்ரண ஆயூகும்ஷி தாரிஷத் | ஆபோஹிஷ்டா மயோபுவः ………… ஆபோ ஜநயதாசநः ஓம் பூர்ப்புவஸ்ஸுவரோம் |

[இதனாலும் முன்போல் தலையில் ப்ரோக்ஷித்துக்கொண்டு காயத்ரியைக் கூறி காலைமாலைகளில் 3 அர்க்யம். பகலில் முதலிலும் காலாதீத ப்ராயஶ்சித்த அர்க்யம் கரிஷ்யே எனக்கூறி கீழ் வரும் மந்த்ரத்தைக்கூறி ஒரு அர்க்யமும் செய்யவேண்டும்.]

**ओं भूर्भुवस्सुवः तत्सवितु र्वरेण्यम्। भर्गो देवस्य धीमहि। धियो योनः प्रचोदयात्।**

ஓம் பூர்ப்பு வஸ்ஸுவः தத்ஸ விதுர்வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோநः ப்ரசோதயாத் |

[3 முறை.

**காலை ப்ராயச்சித்தார்க்ய மந்த்ரம்.**

**यदद्य कच्च वृत्रहन्। उदगा अभिसूर्य। सर्वंतदिन्द्र ते वशे।**

யதத்ய கச்ச வ்ருத்ரஹன் | உதகா அபிஸூர்ய | ஸர்வம் ததிந்த்ர தே வஶே |

---

[இருளை நாசம் செய்யும் ஐஸ்வர்யமுள்ள ஸூர்ய! எல்லா வற்றையும் பிரகாசப்படுத்திக் கொண்டு உதயமாகிறீர். எல்லா உலகமும் உமக்கு வரமாக இருகிறது.]

**மாத்யான்னிக பிராயச்சித்தார்க்ய மந்த்ரம்**

**ओं उद्धे दभिश्रुता मघम् । वृषभं नर्यापसं । अस्तारमेषि सूर्य ।**

ஓம் உத்தே தபிஸ்ருதா மகம் । வ்ருஷபம் நர்யா பஸம் । அஸ்தாரமேஷி ஸூர்ய ।

[ஸூர்ய! நீர் பிரஸித்த செல்வமுள்ளவராகவும் கேட்ட பொருளை வர்ஷிப்பவராகவும் மனிதருக்கு ஹிதம் செய்பவராகவும் தாரகஸூரராகவும் உதிக்கின்றீர்.]

**ஸாயங்கால பிராயச்சித்தார்க்ய மந்த்ரம்.**

**ओं न तस्य मायया चन । रिपुरिशीत मर्त्यः ।**
**यो अग्नये ददाश हव्य दातये ॥**

ஓம் நதஸ்ய மாயயா சந । ரிபுரீஶீத மர்த்ய: । யோ அக்நயே ததாஶ ஹவ்ய தாதயே ॥

[தேவகர்ளுக்கு ஹவிஸ்ஸைக் கொண்டு தரும் அக்னிக்கு ஹவிஸ்ஸைக் கொடுப்பவன், ஶத்ருவின் மாயைக்கு ஆளாக மாட்டான்.]

ஓம் பூர்ப்புவஸ்ஸுவ: — [என ப்ரதக்ஷிணம் செய்து த்யாநம் செய்யவேண்டும்.]

அஸாவாதித்யோப்ரும்மா பிரும்மை வாஹமஸ்மி । பிரும்மைவஸத்யம் । [எனச் சிலர்.] கீழ்வருவதைச் சிலர்.

**காலையில் - காயத்ரீ, ரக்தவர்ணு பிரும்ம ஸ்வரூபா அஸாவாதித்யோ பிரும்மா ஸாஹமஸ்மி பிரும்மை வாஹமஸ்மி ॥**

[சிவந்த பிரும்மஸ்வரூபிணீ காயத்ரீ. இந்த சூர்யன் பிரும்ம, காயத்ரீயாகவும் பிரும்மமயமான சூர்யனுகவுமிருக்கிறேன்]

**மாத்யான்னத்தில் - ஸாவித்ரீ ஶுக்ல வர்ணு ருத்ர ஸ்வரூபா அஸாவாதித்யோ பிரும்ம ஸாஹமஸ்மி பிரும்மை வாஹமஸ்மி ॥**

---

**அநுபவ வேதாந்த க்ஞாநிக்கு மாத்ரம் ஜாதி தோன்ருது.**

[ ஶுக்ரவர்ணமான ருத்ர ரூபிணியான ஸாவித்ரீயாகவும் ப்ரும்ம மயமான சூர்யனுகவும் இருக்கிறேன்.]

**மாலையில்** - ஸரஸ்வதீ கிருஷ்ண வர்ணு விஷ்ணு ஸ்வ ரூபா ஸாஹமஸ்மி ப்ரும்மைவாஹ மஸ்மி ||

[ கருப்பு நிறமாயுள்ள விஷ்ணுஸ்வரூபிணியான ஸரஸ்வதியாகவும் பிரும்மமாகவும் இருக்கிறேன். ]

இருமுறை ஆசமநம் செய்து நவக்ரஹங்களுக்கும் கேசவாதி பன்னிரண்டு நாமாக்களைக்கூறி விஷ்ணுவுக்கும் தர்ப்பணம் செய்ய வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| ஆதித்யம் | தர்ப்பயாமி | மாதவம் | தர்ப்பயாமி |
| ஸோமம் | ,, | கோவிந்தம் | ,, |
| அங்காரகம் | ,, | விஷ்ணும் | ,, |
| புதம் | ,, | மதுஸூதநம் | ,, |
| பிருஹஸ்பதிம் | ,, | த்ரிவிக்ரமம் | ,, |
| சுக்ரம் | ,, | வாமநம் | ,, |
| ஶனைஶ்சரம் | ,, | ஸ்ரீதரம் | ,, |
| ராஹும் | ,, | ஹ்ருஷீகேஶம் | ,, |
| கேதும் | ,, | பத்மநாபம் | ,, |
| கேசவம் | ,, | தாமோதரம் | ,, |
| நாராயணம் | ,, | | |

ஆசமநம். ஓம்தத்ஸத் பிரும்மார்ப்பணமஸ்து.

## ஜபம்.

நமோ ப்ரும்மண்ய தேவாய கோப்ராம்மண ஹிதாயச
ஜகத்திதாய க்ருஷ்ணுய ஸ்ரீ கோவிந்தாய நமோ நம: |
ப்ருத்வி த்வயா த்ருதாலோகா: தேவித்வம் விஷ்னுநாத்ருதா
த்வஞ்ச தாரயமாம் தேவி பவித்ரம் குருசாஸநம் |
அபஸர்பந்து யே பூதா: யே பூதா புவிஸம்ஸ்திதா:
யே பூதா விக்நகர்தார: தேகச்சந்து ஶிவாக்ஞயா |
அபக்ராமந்து பூதாதி பிஶாசாஸ் ஸர்வதோதிஶம்
ஸர்வேஷாமவிரோதேந ஜபகர்ம ஸமாரபே |

---

உலகமே அவனுக்கில்லே! ஜாதி எப்படி இருக்கும்?

# தைத்திரீய உபநிஷத்.

மூன்றும் ப்ரஶ்னம் —இரண்டாவது அநுவாகம்.

अन्नं ब्रह्मेति व्यजानात्। अन्नाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते। अन्नेन जातानि जीवन्ति। अन्नं प्रयन्त्यभि संविशन्तीति॥

**अन्नं**-அன்னத்தை **ब्रह्मेति**- ப்ரும்மம் என்று **व्यजानात्**-அறிந்தார். **अन्नात् हि एव खलु**- அன்னத்திலிருந்துதான் அல்லவா **इमानि भूतानि** இந்த பூதங்கள் **जायन्ते**-உண்டாகின்றன. **जातानि** - உண்டான பூதங்கள் **अन्नेन**- அன்னத்தினுல் **जीवन्ति**-பிழைத்திருக்கின்றன **प्रयन्ति** - அழியும் பூதங்கள் **अन्नं** - அன்னத்தை **अभिसंविशन्ति**-அடைந்து லயமாகின்றன. **इति**-என்று

ப்ருகு குரு சொன்னபடி பூதங்கள் உண்டாகவும் வாழவும் முடிவில் லயிக்கவும் எது காரணமோ அதை ப்ரும்மமென்றுணர்ந்தார். ஸகல ப்ராணிகளும் அன்னம் உண்பவரிடமிருந்தே உண்டாகின்றன என்பது மிகப்ரஸித்தம். உண்டான ஜீவன்களும் அன்னத்தை உண்டே வாழ்கின்றன. முடிவில் உணவுக்குக் காரணமான பூமியிலேயே லயமாகின்றன. ஆதலால் நாம் உட்கொள்ளும் உணவே ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்களுக்குக் காரணமான ப்ரும்மம் என உணர்ந்தார்.

तद्विज्ञाय। पुनरेव वरुणं पितर मुपससार। अधीहि भगवो ब्रह्मेति। तँहोवाच। तपसा ब्रह्म विजिज्ञासस्व। तपो ब्रह्मेति। सतपो तप्यत। सतपस्तप्त्वा॥

---

**तत्**-அதை **विज्ञाय**-அறிந்து **पुनरेव** - மறுபடியும் **पितरं**-பிதாவான **वरुणं** - வருணனை **उपससार**-அடைந்தார். **भगवः** பகவானே **ब्रह्म** - ப்ரும்மத்தை **अधीहि** - கற்பியும் **इति** - என்று **तं**-அந்த பிருகுவை **उवाचह** - வருணன் சொன்னார். **तपसा** - தவத்தினால் **ब्रह्म** - ப்ரும்மாவை **विजिज्ञासस्व** - அறி. **तपः** - தபஸ் **ब्रह्म** -ப்ரும்மம் **इति**-என்று **सः** - அந்த பிருகு **तपः**—தபஸ்ஸை **तप्त्वा** - (தவத்தை) செய்து

உணவை ப்ரும்மம் என அறிந்த பிருகு அன்னம் நமது உடல் வளரக் காரணமானாலும் அது ப்ரும்மமாக ஆகுமா? அன்னம் நமது உடலில் மலத்தையும் துர்கந்தத்தையும் உண்டுபண்ணுகிறது. அது சுத்தமான ப்ரும்மமல்ல என்று எண்ணி மறுபடியும் முறைப்படி தந்தையிடம் சென்று ப்ரும்மத்தை உபதேசியும் என வேண்டினான். அவர் புத்ரனைப் பார்த்து தவத்தினால் ப்ரும்மத்தை அறி. தபஸ்தான் ப்ரும்மம் என்றார். பிருகு மறுபடியும் தவம் செய்தார்.

**இரண்டாவது அநுவாகம் முற்றிற்று,**

**மூன்றாவது அநுவாகம்.**

**प्राणो ब्रह्मेति व्यजानात् । प्राणाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते । प्राणेन जातानि जीवन्ति । प्राणं प्रयन्त्यभिसं विशन्तीति ॥**

**प्राणः** - ப்ராணனனது **ब्रह्मेति** - ப்ரும்மமென்று **व्यजानात्** - அறிந்தார். **प्राणात्हि एवखलु** - ப்ராணனிடமிருந்து தான் அல்லவா **इमानि** - இந்த **भूतानि** - பூதங்கள் **जायन्ते**-உண்டாகின்றன. **प्राणेन** - ப்ராணனால் **जातानि**-உண்டான ஜீவன்கள் **जीवन्ति** - பிழைத்திருக்கின்றன. **प्रयन्ति** -முடிவிலுள்ள பூதங்கள் **प्राणं** - ப்ராணனை **अभिसंविशन्ति** -அடைகின்றன **इति**-என்று

---

ஒரு சிலர் சுயநலமின்றி இது நல்லதென நினைக்கின்றனர்

அன்னத்தைவிட இன்னும் ஸூக்ஷ்மமாய் அருகில் உள்ள ப்ராணனை ப்ரும்மம் என உணர்ந்தார் பிருகு. ப்ராணனிலிருந்தே ஸமஸ்த பூதங்களும் உண்டாகின்றன. ப்ராணனால்தான் ஜீவிக்கின்றன. ப்ராணன் போனால் பிராணிகளும் இறப்பது ப்ரஸித்தம். ப்ராணன் இல்லாதவரிடமிருந்து பிராணிகள் உண்டாவதில்லை. ஆதலால் உலக ஸ்ருஷ்டி ஸ்திதி லய ஹேதுவான ப்ராணனே ப்ரும்மம் என்று உணர்ந்தார் பிருகு.

तद्विज्ञाय। पुनरेव वरुणं पितर मुपससार।

अधीहि भगवो ब्रह्मेति। तꣳहोवाच।

तपसा ब्रह्म विजिज्ञासस्व। तपो ब्रह्मेति॥

सतपो तप्यत। सतप स्तप्त्वा॥

**तत्** - அந்த ப்ராணனை **विज्ञाय** - ப்ரும்மமென அறிந்து **पुनरेव** - மறுபடியும் **वरुणं** - வருணரான **पितरं** - பிதாவை **उपससार** - அணுகினார். **भगवः** - பகவானே **ब्रह्म** - ப்ரும்மத்தை **अधीहि** - கற்பியும். **इति** - என்று **तंह** - அவரை **उवाच** - சொன்னார். **तपसा** - தவத்தால் **ब्रह्म** - ப்ரும்மத்தை **विजिज्ञासस्व** - அறி. **तपः** - தபஸ் **ब्रह्मेति** - ப்ரும்மம் என்று **सः** - அவர் **तपोतप्यत** - தபஸ் செய்தார். **सः** - அவர் **तपःतप्त्वा** – தவம் செய்து

ப்ருகு மறுபடியும் தவம்செய்து ப்ராணன் ஜடமானதால் சைதன்யரூபியான ப்ரும்மமாகாது என யோசித்து மறுபடியும் முறைப்படி தந்தையிடம் ப்ரும்மஸ்வரூபத்தை உபதேசியுமென்றார். வழக்கப்படி வருணனும் தபஸ்தான் ப்ரும்மம் என்றார். ப்ருகு முன்போல் தவம்செய்தார்.

**மூன்றாமனுவாகம் முற்றிற்று.**

---

**அவர்களது அக்ஞானத்திற்கு வருந்துகிறோம்.**

## நூல் அறிமுகம்.

**1. 40 ஸம்ஸ்காரங்கள்:** [174 பக்கம். விலை ரூ. 1—4—0. மாம்பலம் குருகுலத்தில் கிடைக்கும். தபால் சார்ஜ் தனி. [இதன் விற்பனையால் வரும் தொகை 11 ஆண்டுகளாக நமது மாத பத்ரிகை வைதிக தர்ம வர்த்தனியை நன்கு நடத்திய கார்யதர்சியின் ஸன்மாநத்திற்கே பயன்படும். ]

கர்ப்பாதாந, ஸீமந்த, ஜாத கர்ம நாம கரண, அன்னப்ராசந, சௌள, உபநயந, வ்ரத ஸமாவர்த்தந, விவாஹம் ஆகிய கர்மாக்களின் தத்வார்த்தம் மந்த்ரார்த்தம் செய்யும் வகை ஆகியவைகள் தற்காலத்தவரும் ஆமோதிக்கும் வகையில் எளிய நடையில் உயர்ந்த பேப்பரில், அநுக்ஞை இத்மம் தர்வீ ப்ரணீதா ஆகாரம் பரிஸ்தரணம் முதலிய வைதிக சொற்களின் பொருள் விளக்கமும் அநுபந்தத்துடன் அச்சாகியுள்ளது. மிக ஸ்வல்பமான விலை. தர்ம ப்ரசார நூல். உபநயநம் விவாஹம் செய்துக்கொள்பவர் செய்து வைப்போர் ஆகியவர் அவசியம் இதைப் படித்தால் பலனும் கர்மாவில் சிரத்தையும் உண்டாகும். தம்பதிகளுக்கு ஸன்மானமாக இதை ஆசீர்வாதம் செய்தளிக்கலாம்.

**2. சிவராத்ரி பூஜையும் கதையும்:** [ குருகுல வெளியீடு. விலை தபால் செலவுடன் 33 ந பை. மாம்பலம் குருகுலத்தில் கிடைக்கும்.]

உருவில் சிறியதாயினும் விஷயம் நிறைந்தது. உபாத்யாயரின் உதவியைத் தேடாமல் நாமே இதைப் பார்த்துப் பூஜை செய்யலாம். சிவராத்ரி உண்டான வகை அநுஷ்டிக்கும் முறை சிவ அஷ்டோத்ரம் அதனால் உண்டாகும் பயன், இவைகளுடன் சிவாலய ஸேவாமுறை என்ற அநுபந்தத்தில் ஒவ்வொரு தேவ ஸன்னதியிலும் கூறவேண்டிய ஸ்தோத்ரம் தமிழிலும் ஸம்ஸ்கிருதத்திலும் அர்த்தத்துடன் உள்ளது. பக்தர் ஒவ்வொருவரும் படிக்கவேண்டிய ஓர் உயர்ந்த நூலிது.

---

## தார்மிகச் செய்தி.

**சென்னையில் அக்நிஹோத்ரம்:** பக்ஷிதீர்த்தம் ஸ்ரீசுப்ரமண்யஸோமயாஜி சென்னை தம்புசெட்டி தெருவிலுள்ள ஸ்ரீ சங்கர மடத்தில் கார்த்திகைமீ 25வ அக்நி ஆதாநம் செய்துகொண்டு நித்யாக்நி ஹோத்ரம் செய்கிறார். வேத பாஷ்யமும் படிக்கிறார். ஸ்ரீ பரமாசார்யாள் இடமளித்து ஆதரிக்கிறார்கள்.

**மாம்பலத்தில் காளிதாஸ விழா:** ஸம்ஸ்கிருத பரிஷத் ஆதரவில் ஸ்ரீ யு. வெங்கிடகிருஷ்ண ராவ் தலைமையில் ஸ்ரீமான்கள் N.V. வாஸுதேவன், V. S. ரங்கநாதாசார்யார், ஸ்ரீவத்ஸ ஸோமதேவசர்மா, K.R. லக்ஷ்மீநரசிம்மாசார்யார், S. கிருஷ்ணமாசார்யார், ஸ்ரீநிவாஸ ராகவாசார்யார், வேதாந்த தேசிகன், சுந்தர கிருஷ்ணமாசார்யார் முதலியவர் பேசினார்கள். புராண ச்லோகம் பல காளிதாஸன் எழுதியது என நம் ஆசிரியர் படித்துக்காட்டினார்.

**வேத விவாஹ நிதி:** காலத்தில் உபநயனம் செய்து வேதமோதவும் விவாஹம் செய்விக்கவும் பிராம்மண ஸமூஹம் பிரதி மாஸமும் 5 ரூபாயாக 7 வருஷம் 20 பேர் அளித்தால் அதனால் சேர்ந்த மூலதனத்தின் அறைவட்டியிலிருந்து ஒரு மாணவன் அத்யயநம் செய்யும்பொழுதும் பின்னர் அவன் ஜீவித்திருக்கும் வரையிலும் 50 ரூபாய் கொடுக்க வேண்டுமென்றும், ஒருவர் ஆயிரம் ரூபாய் இன்ஷ்யூர் செய்து விவாஹ கமிட்டிக்கு அதை அளித்து அது பூர்த்தியாகும் போது பாதி குடும்பத்திற்கும் பாதி கல்யாணத்திற்கும் தரவேண்டுமென்றும் ஸ்ரீ ஜகத்குரு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். சென்னையில் பலர் இதில் சேர்ந்தனர்.

---

***உலகில் தோன்றிய எந்த பொருளில் ஜாதி பேதமில்லை?***

# ஸ்ரீ சங்கர உபதேச ரத்னம்.

**விவேக சூடாமணி.** (மார்கழியீ தொடர்ச்சி.)

ஆநந்தக்கடலில் மூழ்கியவன் ஒன்றையும் பாரான். கேளான். ஆநந்த பரவசமாகப் பாடுவான். இத்தகைய ஆநந்தத்தையளித்த குருவை வணங்குவான். துதிப்பான். நான் ஸகல தேவதா ஸ்வரூபி. என்னிடமே உலகெலாம் கல்பிக்கப் பட்டது.

ஆகாயத்திற்கும் மேகத்திற்கும் ஸம்மந்தம் இல்லாததுபோல் உடலுக்கும் ஆத்மாவிற்கும் ஸம்பந்தமில்லை. ஜலம் அசைந்தால் ஜலத்தில் உள்ள ஸூர்யன் அசைவதுபோல் தோற்றுகிறது. ஆனால் மேலேயுள்ள ஸூர்யன் அசைவதில்லை. அதேபோல் உடல் உண்டானால் நான் பிறந்தேன் என்றும் அது இறந்தால் நான் இறந்தேன் என்றும் எண்ணினேன். எனக்கேது ஜநநமரணம்?

என்று ஶிஷ்யன் பேராநந்தம் பெற்று ஆடிப்பாட குரு மறுபடியும் உபதேசிக்கிறார். இந்தபிரும்மாநந்தத்தை அநுபவித்தவன் வேறு விஷயாநந்தத்தை விரும்புவானா? பூர்ணிமா சந்த்ரனை விட்டு சித்திரத்தில் எழுதிய சந்த்ரனை எவன் விரும்புவான்.

அகண்ட ஸதா அத்வயாநந்த ஸ்வரூபி நான் என நினை. சாந்தியை மௌநத்தைக் கைகொள். வாஸனை அகலுவதைத்தவிர ஸுகத்திற்கு வேறு உத்தம ஸாதநம் இல்லை. போனாலும் நின்றாலும் உட்கார்ந்தாலும் வேறெந்த நிலையிலிருந்தாலும் பிரும்மாநு ஸந்தாநத்தை மறக்காதே. ஸதா அதில் ரமித்து இரு. வஸ்துவை நினைக்க நியமம் இல்லை. பானையை இது பானையென நாம் அறிய ஏதேனும் நியமமுண்டா?

சிந்தை இல்லாமை தைன்யமில்லாமை பிக்ஷான்னம் உண்ணுதல், நதீ ஜலம் மருந்தல், ஸ்வதந்தரமாக தங்கு தடையின்றி ஸஞ்சரித்தல், பயமின்மை, காட்டிலோ சுடு காட்டிலோ படுக்கை, தோய்த்து உலர்த்தாத வஸ்த்ரம் அல்லது திக்கே வஸ்த்ரம், பூமியே படுக்கை, வேதாந்த வீதியில் ஸஞ்சாரம், பரபிரும்மத்தினிடம் விளையாட்டு இவை வித்வான்களுக்கு ஏற்றவை.

---

**நெற்பயிரில் எத்தனை வகை பேதங் காண்கிறோம்**

பொருளின்றி ஸதாஸந்தோஷம்! ஸஹாயமின்றி மகா பலம், உண்ணுமலே நித்யத்ருப்தி, இத்தகைய குணமுள்ள க்ஞானிக்கு ஈடுண்டோ? ஸூர்யனை ராகு கேது விழுங்கி விட்டான் என்பதுபோல் தேஹசம்பந்தமில்லாத க்ஞானி யை மற்ற மநுஷ்யனைப்போல் நினைப்பர் அறிவில்லாதவர்.

ப்ரவாஹத்தால் மேடுபள்ளங்களில் இழுத்துச்செல் லப்படும் மரக்கட்டைபோல் ஜீவன் முக்தனது உடல் பிராரப்தத்தால் நடத்தப்படும். அதைப்பற்றி அந்தஜீவன் ஒன்றுமறியான். கூத்தாடி வேஷம் தரிப்பதுபோல் ஜீவன் ஸம்ஸாரியாவது. வேஷம் கலைந்தால் அவன் சாதாரண மனிதன்; ஸம்ஸாரமகன்ருல் ஜீவன் பிரும்மமே.

உலர்ந்த இலை மரத்திலிருந்து எங்கேனும் விழுவது போல் சிதக்நியால் எரிக்கப்பட்ட முக்தனது உடல் எங் கேனும் விழும். அதற்கு தேசகால தஹநநியமங்களில்லை. சிறகு நதியில் சிவாலயத்தில் நாச்சந்தில் எங்கு விழுந் தாலென்ன மரத்திற்கு? பாலில் பாலும் நீரில் நீரும் எண்ணையில் எண்ணையும் விட்டதுபோல் ஜீவன் பிரும் மத்தினிடம் ஒன்ருகும். இது இருக்கிறது இது இல்லை என்பது புத்தியின் வியாபாரம். அதுலயமானபின் வியவ ஹாரமேது?

இந்த உபதேசத்தைக் கேட்டு க்ருத க்ருத்யனுன ஶிஷ் யன் குருவை வணங்கி பந்தத்திலிருந்து விடுபட்டான். குருவும் ஆத்ம நிஷ்டையில் அமர்ந்தார் என்று கூறி ஸ்ரீ பரமாசார்யாள் விவேக சூடாமணியை முடிக்கிருர்.

**விவேக சூடாமணி முற்றிற்று.**

[துர்முகஸு மாசிமீ ஆரம்பித்த இது விளம்பிஸு தை யுடன் முடிகிறது. பலர் கூறியதாலும் வந்த விஷயங்களே வருவதாலும் நாலுமாத காலமாக சுலோகம் சுலோகமாக எழுதாமல் கருத்து மாத்ரம் எழுதப்பட்டது].

ஶ்ருதி ஸ்மிருதி புராணுனம் ஆலயம் கருணுலயம் ।
நமாமி பகவத்பாத ஶங்கரம் லோக சங்கரம். ॥

**ஸ்ரீ குருப்யோ நம:**

---

**வாழையில் மொந்தன், ரஸ்தாளி, பேயன், பூவம், பலபல**

# பால பாரதம்.

**விராட பர்வா.** (மார்கழிமீ தொடர்ச்சி).

கே : சரி! 5 புருஷர் ஒரு ஸ்த்ரீ, அங்கு வந்தவர் அதைக் கண்டு பாண்டவரென எளிதில் எல்லோரும் அறிவரே! விராடன் எப்படி அறியாமல் இருந்தான்?

ப : அதுதான் தெய்வபலமென்பது. ஒருவருமிவர்களை ஸந்தேஹிக்கக்கூட இல்லை. ஒரு பலசாலியான மல்லனை பீமன் கொன்றதைக் கண்டும் ஸந்தேஹிக்கவில்லை.

கே : யார் அந்த மல்லன்?

ப : மல்லராஜன் என்றொரு பலசாலி சிஷ்யர்களுடன் ஊர் ஊராகச் சென்று எல்லாமல்லர்களையும் ஜயித்து விராட நகரம்வந்து தன்னுடன் மல்ல யுத்தம் செய்ய ஶக்தியுள்ளவர் இருந்தால் வரலாமென பறைசாற்றினன்.

கே : அங்கு எவரும் இவனுடன் யுத்தம் செய்யவில்லையா?

ப : இவனையும் ஶிஷ்யர்களையும் பார்த்தவுடனேயே விராடனிடமிருந்த மல்லர் பயந்து ஓடிவிட்டனர்.

கே : சமயல் செய்யும் பீமன் எப்படி இவருடன் சண்டையிட்டார்?

ப : ஸபாஸ்தாரர் அரசனிடம் வலலன் இவனை ஜயிப்பான். தர்மர் ஸபையில் பார்த்திருக்கிறேன். அவனை அழையும் என்றார். பீமன் அவையடக்கத்துடன் ஸ்வாமிகளின் அருளாலும் அரசன் பலத்தாலும் முயற்சிக்கிறேன் என்று அரசனாணைப்படி அவனைக் கொன்றான். கந்தர்வன் என்ற பெயரால் கீசகனையும் கொன்றான்.

கே : கீசகன் என்பது யார்?

---

**ஆட்டில் வெள்ளாடு, செம்மறிஆடு, பள்ளாடு பல பல**

ப : விராடராஜனின் ஸேனாதிபதி. மைத்துனன். உலக ப்ரஸித்த வீரர்களில் ஒருவன்.

கே : அவனை ஏன் கொன்ருன்?

ப : ஸைரந்த்ரி எனும் திரெளபதி அவன் ஸகோதரி யான ஸுதேக்ஷிணை வீட்டில் பணிவிடை செய்து கொண்டிருக்கும்பொழுது ஒருநாள் கீசகன் அவளைக் கண்டான். அவளழகைக் கண்டு மோஹித்தான். பணச்செறுக்காலும் அதிகாரத்திமிராலும் தன்னை மணந்து கொள்ளும்படி வேண்டினன்.

கே : அவள் தனது கணவர் யார்? எங்கிருக்கிருர் என்று கூருமல் இருந்ததால் பதி இல்லாதவள் என்று அவனை வேண்டினனே?

ப : திரெளபதி ஸுதேக்ஷிணையிடமும் கீசகனிடமும் இவர்கள் தன்பதி என்று கூருவிடினும் 5 கந்தர் வர்கள் தனக்குப் பதியாக இருக்கின்றனர் என்று கூறினள்.

கே : அப்படியிருக்க அவளை விரும்புவது அந்யாயந்தான் ஸுதேக்ஷிணைக்கு இது தெரியாதா?

ப : திரெளபதி கீசகனுக்குப் பலநீதி தர்மங்களைக்கூறி கந்தர்வர் நீ விரும்புவதை அறிந்தாலே உன்னைக் கொல்வர் என்ருள். ஸுதேக்ஷிணையிடம் சிபார்சு செய்து தன்னை அவள் ஏற்கும்படி செய்ய வேண் டினன்.

கே : சீ! சீ! இது என்ன மானக்கேடான கார்யம். தன் காம வெறியை ஸஹோதரியிடம் கூற இவனுக்கு வெட்கமில்லையா?

ப : காமாதுரர்களுக்குப் பயமில்லை, வெட்கமுமில்லை என்ற பழமொழி கேட்டதில்லையா?

கே : ஸுதேக்ஷிணை என்ன சொன்னள்?

ப : கற்பைக் காக்க என்னை சரணகதி அடைந்தாள். அவளைக் கெடுக்க ஸம்மதிக்க மாட்டேனென்ருள்.

---

**பாம்பில், சாரை, மலை, வெறியன், பச்சை, நல்ல, பற் பல**

# தெய்வம் எங்கே?

[ ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்திரிகள். ]

[ "தெய்வம் என்று வாஸ்தவமாகவே ஒன்று இருக்கிறதா? என்று என்னை அந்தரங்கமாக ஓர் ஆஸ்திக நண்பர் வினவினார். தன்வாழ்வில் பல துன்பங்களை அனுபவித்து அலுத்துப்போனவர் அவர். "யார் கண்டார்கள்" என்றேன் நான். ஏமாற்றமும் கோபமும் அடைந்த அவர் "பக்தி பக்தி என்று பிறர்க்குச் சொல்லிக் கொண்டிருக்கிறீரே, உம்முடைய விஷயம் இதுதானா! என்றார். "வாஸ்தவம், தெய்வத்தை நான் கண்டிருந்தால் உம்மிடம் ஏன் இப்படிப் பேசவருகிறேன்" என்றேன் நான். அவரோ சமாதானம் அடையாமல் சென்றார். அப்பொழுது ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமியின் கீழ்க்கண்ட கீர்த்தனம் ஞாபகம் வந்தது.]

ராகம்: தோடி.] பல்லவி. [தாளம்: ஆதி.

கத்தனு வாரிகி கத்து கத்தனி மொரலனிடு
பெத்தல மாடலு நேடபத்த மௌனே.

**பொருள்** - (தெய்வம்) உண்டு என்று சொல்பவர்களுக்கு உண்டு; உண்டென்று முறையிடும் பெரியோர்களின் வாக்யங்கள் இன்று பொய்யாகிவிடுமா? (உண்டு என்றால் ஏன் எளிதில் கண்ணில் படுவதில்லை, நான் பார்க்க விரும்புவது, அந்த தெய்வத்தின் அழகிய தோற்றத்தைத் தானே.)

அனுபல்லவி.

அத்தம்பு செக்கிள்ளசே முத்துகாரு மோமுகூட
புத்திகல் கினட்டி மாவத்த ராவதே மிரா — (கத்)

**பொருள்** — கண்ணாடிபோல் மின்னும் கன்னங்களுடன் ஒளிமிகுந்த அவன் முகத்தைக் காண புத்திகொண்டு ஏங்கும் எங்கள்முன் வராமல் இருப்பானேன்?

(ஸர்வேச்வரனின் அகண்ட ஸச்சிதானந்த ஸ்வரூப அதிசயத்தைக் காண இயலாதவனாயினும், ராம, கிருஷ்ணாதி அவதாரங்களில் அவன் ஏற்ற ஸுகுணாகர ஸுக ஸ்வரூப தர்சனமாவது எனக்குக் கிடைக்காதா?)

---

முதலில் இவைகளை எல்லாம் ஒரே ஜாதியாக்கட்டுமே

சரணம்.

நித்துர நிராகரிஞ்சி முத்துகா தம்புரபட்டி
சுத்தமைன மனஸுசே ஸுஸ்வரமுதோ
பத்துதப்பக பஜிஞ்சே பக்த பாலனமுஸேயு
தத்தய சாலிவி நீவு த்யாகராஜ ஸன்னுத (கத்)

**பொருள்** — தூக்கத்தை விட்டு, நன்ருகத் தம்புராவை ச்ருதி சேர்த்து அமைத்து, சுத்தமான மனதுடன் ஸுஸ்வரமாக, ஸம்ப்ரதாயப்படி பஜனை செய்தால், அவ்வாறு தன்னை பஜிப்பவர்களை பாதுகாக்கும் மஹாதயவுள்ள மூர்த்தி, நிச்சயம் தரிசனம் அளிப்பான் என்பது பெரியோர்களின் வாக்கன்ரோ. தியாகராஜனுல் இந்த அனுபவம் கண்டு கொண்டாடப் படுகிற ஸ்ரீ ராமமூர்த்தி நிச்சயம் "உளன்" என்பவர்க்கு உளன்.

**தாத்பர்யம்** — எப்பொழுதும் விழிப்பு கொள், தமோ குணம் சேராமல் நிறைந்த ஸத்வ குணத்தை விருத்தி செய். ஏகாக்ர சித்தமுடன் (தம்புரா ஶ்ருதிசேர்ப்பது, மீட்டுவது, தானே மீட்டிக்கொண்டே ஒரு கை தாளம் போடப் பாடுவது ஏகாக்ர சித்தத்திற்கு ஒரு ஸாதகம்.) அலைகிற மனத்தை அடக்கி நிர்மலமாக்கி அவன் திருவடி தியானத்திலேயே நிறுத்து. பெரியோர்கள் காட்டிய வழிகளையே பின்பற்றி (உன் சுய புத்தியின் குயுக்தி வழிகளைக் கைக்கொள்ளாமல்) பகவானை ச்ரவண மனன கீர்த்தன பூர்வமாக அர்ச்சித்தால் அவன் தர்சனம் கிடைக்கும். உன்னிடம் குறைகள் இருந்தாலும், அவன் மிகுந்த கருணை கொண்டவன், ஆதலின் அருள் செய்வதற்கு ஐயமில்லை.

அவனை உண்மை உள்ளத்துடன் நினைந்து தேடினுல் கிடைப்பான். அவன் இருக்கிருன் அருள்புரிவான் என்ற பூர்ண ச்ரத்தையுடன் பஜிப்பவர்க்கு தவருது தன்னைத் தோற்றுவிக்கிருன்.

---

## மாஸ விசேஷமும் வ்ருதங்களும்.

**தைமாதம் தேவர்களது பகற்காலமாகும். தைமுதல் வைகாசி வரை வஸந்த ருதுபோலாகும். 25உ மஹோதய புண்யகாலம். அன்றுமுதல் சாந்த்ரமாந ரீதியாக மாகஸ்நாந ஆரம்பம்.**

---

*நல்ல ஜாதி நாயைக் கலப்பின்றி ரக்ஷிக்கின்றனர்*

# ஸ்ரீ ஜகத்குருவின்
# அரிய அபூர்வ பொன்மொழி.

[ மார்கழிமீ 1௳ நமது ஆசிரியர் பரங்கிமலையில் பிக்ஷா கைங்கர்யம் நடத்தியபோது 3 மணி நேரம் ஏகாந்தமாக ஸம்ஸ் கிருதத்தில் பொழிந்த அம்ருத தாரை. அன்பர் அருந்துக.]

*ஸத்வ குணமிருப்பதால்தான் சிவ விஷ்ணு பூஜை:* சிவன் பஹிஸ்ஸத்வன். ஸத்வகுணம் வெண்மை நிறம். அவர் உள்ள கைலாஸம் வெளுப்பு. ஏறும் விருஷபம் வெளுப்பு. அவர் உடல் வர்ணம் வெளுப்பு. அணியும் பஸ்ம வெளுப்பு. ஆழ்ந்து கவனித்தால் ஸத்வ குண மான கருணையால்தான் ''பிரளய காலத்திலாவது துன்பமில்லாமலிருக்கட்டும்'' என எல்லோரையும் தனக் குள் லயப்படுத்துகிறார். ஆனால் ஸம்ஹாரமென்பது தாமஸ கார்யமாகும்.

விஷ்ணு பஹிஸ்தமஸ். அவர் வர்ணம் கருப்பு. தூக்க மும் தமோகுணம். ஆனால் அவர் செய்யும் பரிபாலன கர்மா ஸாத்விகமாகும். ஆதலால் ஸத்வகுணமுள்ள இருவரையும் பூஜிக்கிறோம். எவ்வளவு பெருமையிருந் தும் ரஜோ குணமுள்ளவராதலால் பிரும்மாவைப் பூஜிப்பதில்லை.

*தாமஸ புராணமானாலும் பிரமாணமே!* அக்நி புராணமும் சிவபுராணமும் தாமஸ புராணம். அவை ப்ரமாணமல்ல என எண்ணக்கூடாது. பதினெட்டு புரா ணங்களும் ஆஸ்திகருக்கு பிரமாணமேயாம். தாமஸ கல்பத்தில் எழுதியவைகள் ஆதலால் அவை தாமஸ மெனப்படும். விஷயங்கள் தாமஸமல்ல என ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர், எவரேனும் சிவ புராணம் தாமஸம், பிரமாண மல்ல எனில் அதற்காக விஷ்ணு புராணம் தாமஸமென்று வாதிப்பது நம்மீது கல் எறியும் ஒருவன்மீது நாமும் கல் எறிவதாகும். அன்றியும் தாமஸமான இரவில் அவஶ்யம் தோன்ற வேண்டிய ப்ரகாசமான புராணங்கள் தான் மிக ப்ரமாணமானவை. பகைமையின்றி விஷ்ணு பக்தி வளர் வது நமக்கு லாபமே. அதை வரவேற்போம்.

---

*அதை விட கேடுகெட்டதா மநித ஜாதி?*

**ஸங்கேதர் எனும் ஸ்மார்த்தர் தோன்றியதெப்படி?**
ஸ்மார்த்த வடம பிராம்மணரில் ஸங்கேதர் என்ற வகுப்பார் திருவநந்தபுரத்தருகிலும் மைசூரிலும் நிறைய இருக்கின்றனர். இன்றும் அவர்களில் பலர் சிறந்த பண்டிதர். மேதாவி. அவர்கள் பேசும் பாஷை தமிழிலிருந்து உண்டானது. கன்னடம் தெலுங்கு முதலியவை தமிழருக்குச் சிறிது புரியும். ஸங்கேதர் பேசும் தமிழ் ஒரு அக்ஷரங்கூட ஒருவருக்கும் புரியாது. பல்லாண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டில் ஓர் உத்தம மஹா பதிவ்ருதை இருந்தாள். அவளுக்குத் தெரியாத சாஸ்த்ரமில்லை. கற்பே உருவாக வந்தவள். பல பண்டிதர்களது ஸந்தேஹத்தைப் பதி அல்லது குழந்தை மூலமாகத் தீர்ப்பாள். இவள் மஹா ஸதி. மஹா விதூஷி. என்ற கீர்த்தி நாடெல்லாம் பரவிற்று. உள்ளூர் பண்டித பத்திகள் இதில் பொறாமை கொண்டனர்.

தங்கள் பதிகள் மூலமாக அவளை எப்படியாவது அவமானப்படுத்த முயற்சித்தனர். உள்ளூர் நாட்டாண்மைக்காரர் மூலமாக அக்கற்பரசி பல பண்டிதர்களது முன்னிலையில் வந்து கேள்விகளுக்கு பதில்கூற வேண்டுமென நிர்ப்பந்தம் செய்தனர். அப்படி வராவிடில் அவள் குடும்பத்தை ஸமூஹ பஹிஷ்காரம் செய்வதாக அச்சமுறுத்தினர். விருப்பமில்லாவிடினும் பதி மாமனர் இருவர் உத்தரவுப்படி ஸபைக்கு வந்தாள். அவள் முகத்தைக் கண்டவரில்லை! குறலைக் கேட்டவருமில்லை! பதியின்மூலமே எல்லோரும் வியக்கும்படி பதில் கூறினள்! பண்டிதர் திகைத்து வெட்கித் தலைகுனிய நேர்ந்தது. மற்ருேர் வகையாக ஸபையில் அவளை அவமானப்படுத்த ஒரு ஸங்கேதம் செய்தனர். அவளது கல்விக்கு மகிழ்ந்து ஒரு பட்டாடைத் தருவதாகவும் அதை ஸபையிலேயே அணிந்து ஸபைக்கு நமஸ்காரம் செய்யவேண்டுமென்றனர். அவர்களளித்த காசிப்பட்டு கட்டமுடியாதது. நான்கே முழம்! ஒரு சுத்துதான் வரும்! ஸபையில் பழைய புடவையை அகற்றி இதை உடுக்கவேண்டும்! ஸதி, பதியின் திருவடியை வணங்கி த்யானம் செய்து மானபங்கமின்றி அதை அணிந்து பணிந்தெழுந்தாள்!

---

**அந்தந்த ரிஷியிடமிருந்து வருவதை அழிக்கலாமா?**

பண்டிதர்களும் அவர் பத்நிகளும் கூட வியந்தனர்! தம் செயலுக்கு சிலராவது வருந்தியிருப்பர்! ஸதியின் பிரார்த்தனையின்படி, அங்ஙனம் செய்த பண்டிதர்கள் பல அரிஷ்டங்களுக்கு ஆளாகி நாட்டையே விட்டு ஓடினர்! ஸதி ஸபையில் உடுத்தியபடி இன்றைக்கும் அவர்களது ஸ்த்ரீகள் விவாஹம் ஶ்ராத்தம் முதலிய கார்யங்களில் உடுப்பர். ஸங்கேதம் செய்து "சதி செய்தோர் ஸங்கேத் ஜாதியாயினர். **பொறுமை கொள்ளாதே! ஸதியை அவமதிக்காதே! கற்புடன் கூடிய கல்வியே சிறந்தது!**

**புதூர் திராவிடர் தோன்றிய வகை:** தென்னாட்டிலே கண்டரமாணிக்கம் என்றோர் ஊருண்டு. ஆங்கிருந்த பிருஹச்சரணம் என்ற வகுப்பார் மிக்க பாண்டித்யம் உள்ளவர்கள். அவ்வூருக்கு ஓர் உத்தம பண்டித ஸன்யாஸி விஜயம் செய்தார். அவ்வூர் வாஸிகள் நம்மைப் போல் இவரும் ஒரு பண்டிதர் என்று எண்ணி வரவேற்க வில்லை. உபசாரம் செய்யவில்லை. பிக்ஷையும் அளிக்க வில்லை. ஆதலால் ஸ்வாமிகள் அவ்வூரில் தனது கடத்தை உடைத்துவிட்டுச் சென்றார். அன்றுமுதல் ஊரும் பண்டிதர்களும் பல கஷ்டங்களுக்குப் பாத்ரமானார்கள். ஆதலால் ஊரைவிட்டு வடக்கே சென்றனர். வெங்கிடகிரி ராஜா அவர்களுக்குப் புதிய ஊர் அமைத்து ஆதரித்தார். அங்கு குடியேறியவர் புதூர் திராவிடரானார்கள். இறைவனின் சாமூர்த்தியான துறவிகளை அவமதிக்காதே.

**திருப்பதி வெங்கட கவி:** இப்பெயருள்ளவர் மஹா கவிகள். ஆந்த்ரத்திலும் ஸம்ஸ்கிருதத்திலும் சிறந்த பண்டிதர்கள். அஷ்டாவதானம் செய்வர். கேட்டவுடன் தங்குதடையின்றி பத்யமாகவும் வசனமாகவும் பதில் கூறுவர். ஸமஸ்தான அரசர்கள் யானைமீது தங்க அம்பாரியில் அமர்த்தி காலுக்கு சலங்கை சங்கிலியும் கைக்கு ஸ்வர்ண தோடாவும் போட்டு அவர்களை ஸன்மானிப்பார்கள். ஆந்த்ர தேசத்தில் ஒரு பண்டித ஸபை உண்டு. அந்த ஸபை ஒரு பண்டிதரைச் சிறந்தவர் என ஆமோதித்து ஸம்மதிபத்ரமளித்தால் அந்த பண்டிதரைக் கண்டவுடன் ஏழைகூட தன் சக்திக்கேற்றபடி தநமளிப்பர். இருவரும் ஸமீபத்திலிருந்தவர்.

---

**ஜாதியை மனிதனா படைத்தான்? இல்லை, இல்லை.**

பிராம்மணனை ஏன் கௌரவித்தனர்? வேதம் பிராம் மணரிடமும், ஹவிஸ் பசுவினிடமுமிருக்கின்றது. இவை களால் செய்யும் யாகத்தினுல் உலக க்ஷேமம் உண்டா கிறது. அதனுல்தான் கோப்ராம்மணேப்ய: ஶுபமஸ்து என்பர். தன்னைக் கௌரவிக்க ப்ராம்மணரே இதை எழுத வில்லை. "பிராம்மணனைக் கொல்லாதே, ஆத்ரேயனைக் கொல்லாதே" என ஆத்ரேயர் கூறினுல் பாரத்வாஜர் ஏற்பரா அதை? அத்ரி 3 நாள்கூட வேதமோதாம லிருந்த தில்லை. வேதமே வேதிய பூஜைக்குக் காரணம்.

* * * * *

ஜோதிஷப் பகுதி.

# தைமாத கோசார பலன்.

**ஜோதிஷபானு, E. S. K. ஸ்வாமி,**

பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்.

## மேஷ ராசி.

*அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய.*

குரு அஷ்டமத்திலும், சனி பாக்கியத்திலும் இருக்கிறுர்கள். உத்தியோக மாற்றம் உண்டாகும். சுப சங்கதி கேள்விப்பட நேரும். பந்துக்களால் சிறிது கவலை. புதிய முயற்சிகளில் பிறர் உதவியை எதிர்பார்க்கும்படியாகும். ஏதா வது ஒரு வகையில் கவலை உண்டாகும். குடும்பத்தில் சில கிலேசம் ஏற்படும். செலவுகள் கூடுதலாகும்.

## ரிஷப ராசி.

*கிருத். 2ம் பாதம் முதல் ரோகிணி மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய.*

குரு ஸப்தமத்திலும், சனி அஷ்டமத்திலும் இருக்கிறுர்கள். சொல்லுக்கு மதிப்பு ஏற்படும். செய் தொழிலில் முன்னேற்றம் ஏற்படும். பந்துக்களால் உதவியுண்டாகும். மத்தியில் சில குழப்பமான சூழ்நிலை ஏற்பட்டு நீங்கும். முக்கியஸ்தர்களால் மரியாதை ஏற்படும். தெய்வ சிந்தனையும், சுப காரியங் களில் செலவும் ஏற்படும். தன நடப்பில் சுகமுண்டாகும்.

## மிதுன ராசி.

*மிருக. 3ம் பாதம்முதல் திருவாதிரை, புனர்வசு 3 பாதம்முடிய.*

எந்த காரியத்தையும் ஆலோசித்து செய்யவேண்டும். பிறர்காரியங்களில் தலையிடாதிருப்பது நலம். வியாபாரம் சிறுகச் சிறுக முன்னேறும். பந்து சினேகிதரால் சிறிது கவலை உண்டாகும். முக்கிய அலுவல்களில் சிலர் கலக்க நேரிடும். வரவேண்டியது தடைப்பட்டு கூடும். மேலோர் நேசம் ஏற்படும். வெளியூர் போய்வர நேரும்.

---

### கடக ராசி.

புனர்வசு 4ம் பாதம் முதல் புஷ்யம், ஆயில்யம் முடிய.

குரு பஞ்சமத்திலும் சனி ஆறிலும் இருக்கிருர்கள். ஆரோக்ய விஷயமாய் செலவுகள், குடும்ப விஷயத்தில் திருப்திக் குறைவு, வீண் வகையில் செலவுகள் நேரிடும். வெளியூர் போய்வர நேரும். சிலருக்கு இருப்பிடம் மாறும். சுப விஷயமான முயற்சிகள் உண்டாகும். உத்தியோகத்தில் அதிகாரி ஆதரவு ஏற்படும். முன்னேற்றத்திற்கு வழியுண்டாகும்.

### சிம்ம ராசி.

மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய.

குரு நான்கிலும் சனி பஞ்சமத்திலுமிருக்கிருர்கள். உழைப்பு அதிகமாகும். நல்ல பெயரும் கீர்த்தியும் ஏற்படும். பெரிய மனுஷ்யர்களின் நேசமும், ஆதரவும் ஏற்படும். சில பொருள் வாங்க நேரும். சுப சங்கதி கேள்விப் படும்படியாகும். குடும்ப செலவு அதிகமாகும். சிலருக்கு கடன் வாங்க நேரும். வியாபாரத்தில் சிக்கல் ஏற்பட்டு விலகும்.

### கன்னியா ராசி.

உத்திரம் 2ம் பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய.

குரு மூன்றிலும் சனி நான்கிலும் இருக்கிருர்கள். இடமாற்றவாவது பிரயாணத்தையாவது கொடுக்கும். நல்ல சங்கதி கேள்விப்படுதல், புதிய முயற்சி கைகூடுதல், பெரியோர்களைக்காணல் இவைகள் ஏற்படும். சிலருக்கு பல ஜன ஆதரவு உண்டாகும். ஆரோக்ய வகையில் சிறிது செலவுகளும் ஏற்படும்.

### துலா ராசி.

சித்திரை 3ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3ம் பாதம் முடிய.

குரு தனத்திலும், சனி மூன்றிலும் இருக்கிருர்கள். பதவி உயரும், இட மாற்றம் உண்டாகும். செய் தொழிலில் ஆதாயம் ஏற்படும். பிரபுக்களை சந்திக்க நேரும். குடும்ப சுகம் ஏற்படும். தன நடப்பில் சௌகரியமுண்டாகும். சில பொருள் வாங்கும்படியாகும். புதிய சிநேகம் ஏற்படுவதாகும்.

### விருச்சிக ராசி.

விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை முடிய.

குரு ஜன்மத்திலும் சனி இரண்டிலும் இருக்கிருர்கள். புதியவகை முயற்சிகள் பலிக்கும். வெளியூர் போய்வர நேரும். வரவேண்டியவை தடைப்படும். சத்துருமூலம் சிறிது கவலை, வீண் செலவுகள், குடும்ப நடப்பில் கிலேசம், சுப முயற்சிகளில் தடை, நிம்மதி குறைவு, வியாபாரம் நிதானம் இப்படியாக நடக்கும். சிலர் மறைமுகமாக தூஷிப்பர்.

### தனுர் ராசி.

மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய.

குரு விரயத்திலும் சனி ராசியிலும் இருக்கிருர்கள். தொழிலில் புதிய கூட்டுமுறை ஏற்படும். சுப விஷயங்களில் செலவுகள் ஏற்படும். ஸாமான்யமாய் தேக சுகக்குறைவும் வைத்திய வகையில் செலவுகளும் ஏற்படும். பந்து மூலம் கிலேசம் ஏற்பட்டு நீங்கும். குடும்ப சௌக்கியம் ஏற்படும். பொருள் சேர்க்கை உண்டாகும்.

---

## மகர ராசி.

உத்ராடம் 2ம் பாதம் முதல் திருவோணம் அவிட். 2ம் பாதம் முடிய.

குரு லாபத்திலும், சனி விரயத்திலும் இருக்கிறார்கள். உத்தியோகத்திலும் இருக்கிறார்கள். உத்தியோகத்தில் புதிய மாற்றம் ஏற்படும் சிலருக்கு உத்தியோகம் கிடைக்கும். சிலருடன் பகை ஏற்பட்டு நிவர்த்தியாகும். வியாபாரத்தில் வருமானம் கூடும். சிநேகிதரால் நன்மை, நற்சேதி கேள்விப்பட நேருதல், குடும்பத்தில் சுபச் செலவு ஏற்படும்.

## கும்ப ராசி.

அவிட்டம் 3ம் பாதம் முதல் சதயம், பூரட். 3ம் பாதம் முடிய.

குரு ஜீவனத்திலும், சனி லாபத்திலுமிருக்கிறார்கள். இதனால் உத்தியோகத்தில் நன்மையும், ஆதரவும் ஏற்படும். செய் தொழிலில் முன்னேற்றமும், நல்ல பெயரும் ஏற்படும். சுப விஷயமான முயற்சிகள் கைகூடும். வெளியூர்போய் வரும்படியாகும். பழைய வரவுகளில் திருப்தி ஏற்படும்.

## மீன ராசி.

பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்ரட்டாதி ரேவதி முடிய.

குரு பாக்யத்திலும் சனி ஜீவனத்திலும் இருக்கிறார்கள். தொழிலில் முன்னேற்றம் ஏற்படும். சிலருக்கு கூட்டுத்தொழில் ஏற்படும். குடும்பத்தில் திருப்தி ஏற்படும். சிலவகை விற்பதில் ஆதாயம் ஏற்படும். சிநேகித ஆதரவு உண்டாகும். சுப முயற்சிகளும், வெளியூர் பயணமும் உண்டாகும்.

### அன்னியர் ஸம்ஸ்கிருதம் கற்கின்றனர். இந்துவான நாம் ???

“பிரஞ்சு மந்திரி **ஆண்டிரோ மால்ரோ,** 30 ஆண்டுகளாக ஸம்ஸ்கிருதம் புராணம் உபநிஷத் கற்றேன். புண்ணிய இந்தியாவை நேரில் தர்சிக்க வந்தேன்” என்றார். மதுரை சித்ரங்களைக் கண்டு ‘நான் படித்த புராணக்கதை, என்றார். த்வேஷத்தாலும் அச்ரத்தையாலும் நாம் ஸம்ஸ்கிருதத்தைத் தொலைக்கிறோம்.

## சந்தாதாரர்களுக்கு ஓர் விக்ஞாபனம்.

*12ம் ஆண்டு புஸ்தகத்தைத் தொடர்ந்து அனுப்புங்கள், சந்தாவை கூடிய சீக்கிரமனுப்பி வைக்கிறேன் என்று கடிதம் எழுதிய சந்தாதாரர்கள் சந்தாவை அனுப்பிவைக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

*சந்தாவை அனுப்பும்போது சந்தா நம்பரைக் குறிப்பிடுங்கள்.

*விலாஸம் மாறினால் தயவுசெய்து பத்ரிகை சேருவதற்கு உடன் கடிதமெழுதுங்கள். அட்ரஸை விளக்கமாக கூப்பனில் எழுதுங்கள்.

---

**மநிதர் கலப்பு மணம் செய்தால் ஸம்மாநமா?**






13. नानोपायैः दिशिदिशि धनान्यार्जयित्वा व्ययित्वा
सम्यक् संपादित मिदमिह स्थौल्य मेकंशरीरे ।
श्रुत्वा श्रुत्वा बहुजन मुखा दायु षैतावतापि
प्राप्तं दर्शावधि तिमिरवद ज्ञान मेकम् ॥

நாநோபாயை: தி$^3$ஶி தி$^3$ஶி த$^4$நா ந்யார்ஜயித்வா வ்யயித்வா
ஸம்யக் ஸம்பாதி$^3$த மித$^3$மிஹ ஸ்தெ$^2$ளல்ய மேகம் ஶரீரே
ஶ்ருத்வா ஶ்ருத்வா ப$^3$ஹுஜனமுகாத் ஆயுஷை தாவதாபி
ப்ராப்தம் த$^3$ர்ஶாவதி$^4$ திமிரவத் அக்ஞாந மேகம் ॥

பல திசைகளிலும் ஓடி பலவகையாகப் பொருளைத்தேடி செல வழித்து நன்ருகத்தேடியது உடல் பெருத்ததொன்றே. பலரிடம் பலவகையாகக் கேட்டும் இவ்வளவு வயதாகியும் அமாவாஸை இருட்டுபோன்ற த்ருடமான அக்ஞான மொன்றே கிடைத்தது.

14. क्वेक्षन्ते मां क्वचन शयितं किंकराः दण्डपाणेः
ईक्षन्तां वा तदपि मयि किं कुर्यु रुद्दामवृत्ते ।
कुर्युः किंचि त्प्रसभ मपिवा घातयिष्यामि राज्ञे
त्यन्तः धैर्यं परमिह वहन् अन्तकं नस्मरामि ॥

க்வேக்ஷந்தே மாம் க்வசந ஶயிதம் கிங்கரா: த$^3$ண்டபாணே:
ஈக்ஷந்தாம்வா தத$^3$பி மயிகிங் குர்யு ருத்த$^3$ாம வ்ருத்தே ।
குர்யு: கிஞ்சித் ப்ரஸப$^4$ மபிவா க$^4$ாதயிஷ்யாமி ராக்ஞே
த்யந்த: தை$^4$ர்யம் பரமிஹ வஹந் அந்தகம் நஸ்மராமி ॥

எங்கோ ஒரு மூலையில் படுத்திருக்கும் என்னை யமகிங்கரர் கள் எங்கே பார்க்கப் போகிறுர்கள்? அப்படி பார்த்தாலும் கட்டுக் கடங்காத என்னை என்ன செய்வார்கள்? அப்படியும் பலாத்கார மாக ஏதாவது செய்தாலும் என் யஜமானனிடம் (ராஜாவிடம்) கூறி அவர்களைக் கொல்வேன் என்று மிக்க தைர்யம் கொண்டு யமனை நினைப்பதில்லை. யமபயமிருந்தால் பகவானை த்யாநம் செய் வோம்.

---

ஜாதி வேண்டாமெனில் ச்ராத்தம் வேண்டாம்.

15. वेदावास्युः वितथवचनाः विस्मरे दीश्वरोवा
धर्माधर्म स्थितिविरचनां अन्तको वा मृषास्यात्
नित्योवास्या महमिति बहूनु ल्लिखन्तः समाधीन्
मेदो वृद्ध्या मुदितमनसः सर्वतः निर्वृताः स्मः ॥

வேதா வாஸ்யு: விதத2வசநா: விஸ்மரேத் ஈஸ்வரோவா
தர்மாதர்ம ஸ்தி2தி விரசநாம் அந்தகோவா ம்ருஷாஸ்யாத்
நித்யோ வாஸ்யாம் அஹமிதி ப3ஹூநுல்லிக2ந்த: ஸமாதீன்
மேதே3ாவ்ருத்3த்4யா முதித மநஸ: ஸர்வத: நிர்வ்ருதா: ஸ்ம:

வேதங்கள் பொய்யாக இருக்கக்கூடாதா ? ஈஶ்வரன் தான் தர்மா தர்ம வ்யவஸ்தை செய்வதை மறக்கக் கூடாதா? யமன் இருப்பதுதான் பொய்யாகக்கூடாதா ? நான்தான் சாகாமல் நித்யனாக இருக்கக்கூடாதா ? என்று பல விஷயங்களை எண்ணிக்கொண்டு கொழுப்பினால் ஸந்தோஷமடைந்து ஒரு நற்கர்மாவையும் செய்யாமலிருக்கிறோமே.

16. यामे यामे गलतिवपुषः स्रंसते सन्धिबन्धः
श्वासे श्वासेऽपि च विचलति क्षीयते दीर्घमायुः ।
भुक्ते भुक्तेऽपि च सुखलवे लुप्यते पुण्यराशिः
कृत्ये कृत्ये निरवधि पुनः वर्धते पातकं नः ॥

யாமே யாமே கலதிவபுஷ: ஸ்ரம்ஸதே ஸந்திபந்த:
ஶ்வாஸே ஶ்வாஸேபி ச விசலதி க்ஷீயதே தீ3ர்க4மாயு: ।
பு4க்தே பு4க்தேபி ச ஸுகலவே லுப்யதே புண்யராஶி:
க்ருத்யே க்ருத்யே நிரவதி புந: வர்த4தே பாதகம்ந: ॥

ஒவ்வொரு யாமமும் செல்லும்பொழுது நமது ஸந்திபந்தங்கள் தளருகின்றன. ஒவ்வொரு மூச்சு விடும்போதும் நமது ஆயுஸ் குறைந்து வருகிறது. சிறிது ஸுகத்தை அனுபவிக்கும் போது புண்யம் குறைகிறது. ஒவ்வொரு கார்யத்திலும் பாபம் மாத்ரம் விருத்தியாகிறது. நற்கருமம் செய்து பாபத்தைக் குறை.

---

**கலப்பு ஜாதியில் எவருக்கு யார் ஶ்ராத்தமளிப்பது ?**

# ஹாலாஸ்ய மஹிமை.



## உக்ரபாண்டியன் தோற்றம்.

நல்லதோர் நாளிலே அன்னை மீனாக்ஷி பிரஸவித்தாள். தந்தை தாய் தரணியில் வந்து தரணியாள்வதைக்கண்டார் முருகன். தான் அவருக்குத் தநயனாகத் தோன்றினர். பெற்றோர் பேராநந்தமடைந்தனர். உக்ரவர்மபாண்டியன் எனப் பெயரிட்டனர். வளர்பிறை சந்த்ரனைப்போல் வளர்ந்தார் அறிவுச்சுடர் முருகபெருமான்.

குருவை வியாஜமாகக் கொண்டு ஸகல கலைகளிலும் கரைகண்டார். அரசகுமாரனுக்கேற்றபடி ஆனையேற்றம் அஸ்த்ர ஶஸ்த்ரம் முதலியன விரைவில் பயின்றார். குலத்திற்கேற்ற வண்ணம் குணக்குன்றாக விளங்கினர். அவரது ஶக்தியைக் கண்டு ஆநந்த மடைந்தனர் பெற்றோரும் மற்றோரும். கல்யாண புராதிபனான ஸோம சேகரன் மகளான காந்திமதியை புத்ரனுக்கு மணம் செய்வித்தார்கள். அரசாக்ஷியை அவரிடம் அர்ப்பணம் செய்தார் ஆலாஸ்யசுந்திரர். மீனாக்ஷி ஸுந்தரேசர் மதுரை ஆலயத்தில் புகுந்து மறைந்தனர். பாண்டிய ராஜ்யத்தைக்கண்டு பொறாமை கொள்ளும் தேவேந்த்ரன் கிரீடத்தைக் கீழே தள்ள ஒருவளையும், கர்வங்கொண்ட கடலை அடக்க ஒருவேலையும், மேருமலையின் செறுக்கை அகற்ற ஒரு செண்டையும் அளித்துச் சென்றார் ஸுந்தரேசர்.

**இந்த்ர கர்வ பங்கம்:** உக்ரபாண்டியன் எண்ணிறந்த வேள்விகளைச் செய்தார். அவர்நாடு பொன்னாடு போல் விளங்கிற்று. தேவலோகம் சென்றவர் அனைவரும் உக்ரனது பெருமையை வர்ணித்தனர். வாஸவன் இதைக் கேட்டு பொறாமை கொண்டான். தனது சிற்றரசனான வருணனை அழைத்து இரவில் மதுரையைக் கடல் சூழும்படி உத்தர விட்டான். ஓரிரவு அங்ஙனமே கடல்பொங்கி மதுரை அருகே வருவதை ஸுந்தரேசர் ஒரு ஸித்த ரூபியாகி வந்து உக்ரனுக்கு உரைத்தார் கனவில். கண்விழித்து உக்ரன் இது உண்மையா? என்று யோசிக்கும்போது கனவில் கண்ட ஸித்தர் நேரில் தோன்றி உன் தந்தை

---

**வேதமில்லை! சாஸ்த்ரமில்லை! தர்மமில்லை என்றாகும்.**

அளித்தவேலால் கடலை விறட்டு என்ருர். அவரை வணங்கி வேலாயுதத்தை அதன் மீதெறிய கடல் ஜலமெலாம் வற்றிற்று. இதைக்கேட்ட மதுரை மானிடர் மட்டில்லா மகிழ்ச்சி அடைந்தனர். வானவர்த் தலைவன் வருந்தினுன். வருணன் வெட்கிச் சென்ருன்.

ஒருஸமயம் சேர சோழ பாண்டிய நாடுகளிலே மழை பொழியாதொழிந்தது. முனிவரில் சிறந்த அகஸ்த்யரை அணுகி மழைக்கதிபனுன இந்திரனை எப்படி தர்சிப்ப தென வினவினர். ஸோமவார விரதத்தை நன்கு அனுஷ் டித்தால் இந்த்ரலோகம் செல்லலாம் என்ருரவர். அங்ஙனமே அநுஷ்டித்து மூவரும் சக்ரன் ஸபைக்குச் சென்றனர். தனது ஆஸனத்தைவிடத் தாழ்ந்த மூன்று ஆஸநங்களைக் காட்டி அரசர்களே அமருக என்ருன் அமராதிபன். சேர சோழர் அங்ஙனம் அமர. தந்தை யின் தொந்தி மீதேறி பிரணவப் பொருள் கூறிய மயூர வாஹநன் மகவானின் பாதி ஆஸநத்தில் அமர்ந்தார். இதைக்கண்டு சினங்கொண்டாலும் இந்திரன், கடலை அடக்கிய உக்ரனிடம் ஒன்றும் பேசாது எங்கு வந்தீர்கள்? என்ன வேண்டும்? என்று மூவரையும் வினவினுர். சேர சோழ மன்னர்கள், தன்னுடு மழை பெய்து ஸுபிக்ஷ மாக இருக்க வேண்டுமென்றனர். பக்தருக்குப் பலனை வழங்கும் உக்ர ரூபியான முருகன் ஒன்றும் கேட்க வில்லை. ஆதலால் அமராதிபன் மற்ற அரசர்களுக்கேற்ற ஆடை ஆபரணம் தந்து மிகக் கனமாய் சுமக்கமுடியாத தான ஒரு முத்து மாலையை இவர் கழுத்தில் போடச் செய்தான். பதிநான்கு உலகினையும் சுமக்கும் இவருக் கோர் பாரமா இது? புஷ்ப மாலைபோல் அநாயாஸமாக இதை அணிந்த உக்ரரைக்கண்டு முன்னிலும் பன்மடங்கு பொருமை கொண்டான் இந்த்ரன். மன்னர் மாநிலம் சென்றனர். அவ்விருவர் நாடுகளும் சுபிக்ஷமாக இருந்தன. பாண்டிய நாட்டில் மட்டும் மழை இல்லை.

ஒருஸமயம் இந்த்ர வாஹனமான நான்கு மேகங்கள் பொதிய மலைமீது நடமாடுவதைக்கண்டான் உக்ரபாண்டி யன். மழை பொழியாமல் வீணே நடமாடுமவைகளைச் சிறையிட்டான். இதை அறிந்த இந்த்ரன் அடங்காச்

சினமுள்ளவனாய் நால்வகை சேனையுடன் மதுராபுரியை முற்றுகை இட்டான். தேவஸேநாபதியான உக்ரனா இதற்கஞ்சுவான்? போர் கோலம் கொண்டு தந்தை அளித்த வேலாயுதத்தை வீச சக்ரனது செறுக்குடனவன் கிரீடமும் கீழே விழுந்தது. வெட்கத்துடன் வணங்கி பாண்டிய நாடும் மழை பொழிந்து சுபிக்ஷமாக இருக்கும்படிச் செய்து மேகங்களை மீட்டுச்சென்றான்,

**மேரு மலையிலிருந்து செல்வம்:** உக்ரனது மனைவியான காந்திமதி கர்ப்பிணியாகி ஒரு புதல்வனை ஈன்றாள். வீரபாண்டியன் என அவனுக்குப் பெயரிட்டு குழந்தையை வளர்த்தனர். பாண்டிய நாட்டிலே பக்தி இல்லாதவரைப் பார்க்க முடியாது. எங்கும் தர்மம் பக்தி கர்மா க்ஞாநம் இவை ஓங்கி வளர்ந்தன. ஒரு ஸமயம் மழை இன்மையால் செல்வங் குறைந்தது. அரசன் வருந்தினான். ஓரிரவு பகவான் உக்ரனது கனவில் தோன்றி வடநாட்டு யாத்ரை செல். மேருவிடமுள்ள செல்வத்தைக் கொண்டுவா என தூண்டினார். உள்நாட்டைக் காக்கத் தக்க ஏற்பாடுசெய்து விஜய யாத்ரை புறப்பட்டார் உக்ரபாண்டியன். வாராணஸீ ப்ரயாகை கயை முதலிய இடங்களுக்குச் சென்று விதிப்படி ஸ்நாந தாநங்களையும் பித்ரு கார்யங்களையும் நன்கு செய்துமுடித்தார். இறைவன் சொற்படி அவரளித்த சண்டால் மேரு சிகரத்தைப் பிளந்து அபரிமிதமான ஸுவர்ணங்களை எடுத்துக்கொண்டு அங்கு தனது மீன் கொடி முத்ரையை நாட்டித் தன் நாடு திரும்பினார். புதல்வனை வீரபாண்டியன் தக்க வயதும் யோக்யதையும் உள்ளவனாக இருப்பதைக்கண்டு அவனுக்கு முடிசூட்டி அரசியலை அளித்தார். நாடு செழித்தது. உக்ர பாண்டியனும் ஸுந்தரேசனிடம் லயமானார்.

## வேதப் பொருள் கூறிய விந்தை.

பிரளயம் முடிந்து உலகம் உண்டாகும்போது பரமசிவன் தனது மூச்சுக்காத்து ரூபமாக வேதங்களை வெளியிடுகிறார். அதைத் தவ வலிமையால் முநிவர் உணர்கிறார்கள். ஒருஸமயம் நைமிஶாரண்யத்தில் கண்வர் கர்க்கர் முதலிய முநிவர்கள் அவ்வேதத்தின் ஆதி விதையான பிரணவத்திற்கும் வேதங்களுக்கும் பொருள்

---

*முக்காலமுமுணர்ந்த முநிவர்களை விடவா?*

இன்னதென அறிய சர்ச்சை செய்தனர். தற்செயலாக அங்கு வந்த ஹரபக்தர் என்ற முநிவரைப் பணிந்து பொருள் விளக்க வேண்டினர். அவர் வேதத்தைக் கூறிய பரமனே இதற்குப் பொருள்கூறுவர். தக்ஷிண தேசத்தில் துவாதசாந்தமெனும் மதுரைமாநகரிலே தக்ஷிணாமூர்த்தி யாயிருக்கும் பகவானிடம் செல்லுங்கள் என்றார்.

கண்வாதி ரிஷிகள் அங்குவந்து பகவானைத் துதிக்க அவர் சிறந்த குருவடிவமெடுத்துவந்து பிரணவத்திலுள்ள அகாரம், ஆத்மதத்வம், வித்யா தத்வம் உகாரம், சிவ தத்வம் மகாரம் இவை நாதபிந்துக்களுடன் கூடி காயத்ரி யையும் அது வேதங்களையும் உண்டு பண்ணிற்று. கர்ம காண்ட க்ஞாந காண்ட வடிவமாக உள்ள வேதத்திற்குப் பொருள் லிங்க வடிவமாக உள்ள ஹாலாஸ்யநாதனே. அவரிடமிருந்து இருபத்தெட்டு ஆகமங்கள் தோன்றின. அவை சைவம் முதலியவைகளுக்கு ஆதாரமென்று கூறி தக்ஷிணாமூர்த்தி விக்ரஹத்துடன் லயமானார்.

## அபிஷேக பாண்டியனுக்கு நவரத்நமளித்தல்.

வீரபாண்டியனுக்கு பட்டமகிஷி தவிர ஐந்து மனைவி களிருந்தனர். அவர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ஒரு குமரன் தோன்றி வளர்ந்து வந்தனர். மூத்த மஹிஷிக்கு வெகு நாட்சென்று ஒரு குழந்தை பிறந்தது. அது யௌவநம் பெறுவதற்குள் வீரபாண்டியன் விண்ணுலகம் எய்தினன். மந்திரிகள் மூத்தவளது குமாரனைக்கொண்டு ஈமக்கடனைச் செய்து முடித்தனர். வயது வந்த இளையா ளின் குமாரர் ஐவரும் ஒன்று சேர்ந்து மூத்தாளின் குமாரனே அரசனுவான். ஆதலால் தங்களுக்குச்செல்வம் வேண்டுமென தந்தையின் கிரீடம் நவரத்ந மாலைகள் எல்லாவற்றையும் ரஹஸ்யமாக எடுத்துச் சென்றனர். மூத்தவளின் குமாரனுக்கு முடிசூட்டக் கருதி ரத்ந கிரீடம் ஹாரம் முதலியவைகளைத் தேடினர். அவை காண வில்லை. விஷயமறிந்த மந்திரிகள் புதிய கிரீடம் அமைக்க வும் விலை உயர்ந்த நவரத்நங்களுமில்லாமல் அக்குழந்தை யுடன் கூட ஹாலாஸ்ய நாதனிடம் முறையிட ஆலயத்திற் குப் புறப்பட்டனர்.

---

மதாசார்யர்களை விடவா இவர்கள் மேதாவி ?

# ஆயுர்வேதம். (4)

வைத்தியப் பகுதி.

டாக்டர் V. K. வெங்கிடசாமி, M. B., B. S., F. I. M.

***சிகித்ஸை முறைகள்:*** நோய்களை அணுகாமல் தடுப்பதற்கும், வந்த பிறகு போக்குவதற்கும் ஆனமுறைகளை ஜனங்களின் ஸ்தூலமானவர்கள், மெலிந்தவர்கள் என ஸ்வபாவ வகைகள்படி இரு விதமாய்ப் பிரிக்கலாம். **பிர்ம்மணம்** அல்லது ஸந்தர்ப்பணம் என்பது பிருதிவி, அப்பு பூதங்களாலானவை. புஷ்டியைத்தரும். மெலிந்த பிணியாளிகளுக்கு ஏற்றது. **லங்கனம்** அல்லது அபதர்ப்பணம் என்பது தேயு, வாயு, ஆகாயம் பூதங்களாலானவை. தேகத்தை லேசாகச்செய்யும். ஸ்தூலமான பிணியாளிகளுக்குத் தகுந்தது. ஸ்தூலத் தன்மையைவிட சற்று மெலிந்திருப்பதே நல்லது.

பால், சர்க்கரை, மாம்ஸம், ஸ்நேஹவஸ்துக்கள். மதுரரஸம், பிரும்மணவஸ்தி, (எனிமா) சயனம், நித்திரை ஸுகவாழ்வு, அப்யங்க ஸ்நானம், கவலையின்மை, மனக்களிப்பு, ஆகியவைகள் பிரும்மணசிகித்ஸைக்குஏற்றவை.

**லங்கன முறையை** சோதநம் சமனம் என இருவகையாகப் பிரிக்கலாம். **சோதநம்**-ஐந்து விதம். வஸ்தி, வமனம், விரேசனம், சிரோவஸ்தி, (நஸ்யம்) ரக்த மோக்ஷணம் என்பன. **சமநம்**-ஏழுவிதம். பாகனம், தீபநம், பசி தாக மடக்கல், தேகப்பயிற்சி, வெயில் காற்றிலிருத்தல் என்பன.

இனி வியாதிகளை ஒவ்வொன்ருய் எடுத்துக்கொண்டு அவற்றின் தன்மைகளையும், தடுத்துப்போக்கும் வழிகளையும் கவனிப்போம். முதலில் வியாதிகளுக்கெல்லாம் தலைமை வகிக்கும் ஜ்வரத்தைப் பற்றி அறிவோம்.

***மிளகு:***— திரிகடுகு என்ற கணத்தில் இது சுக்குக்கு அடுத்த வஸ்து. நமது ஆகாரத்தில் அதிகம் சேருகிறது. தினமும் நாம் உட்கொள்ளும் வஸ்துக்களில் எவை தேக தாதுக்களாக மாறுகின்றனவோ அவைகளுக்கு **ஆகாரங்கள்** எனப்பெயர். இவ்விதம் தேக தாதுக்களாக மாருமல் தேக கார்யங்களுக்கு உதவியாகி அவற்றின் கோளாறுகளைப் போக்கி, ஆரோக்ய நிலையைத் தரும்.

---

வஸ்துக்களுக்கு **மருந்துகள்** எனப் பெயர். மருந்தான வஸ்துவை ஆகாரத்தில் சேர்ப்பதால் ஆகாரம் சரியாக ஜீரணமடையும். இவ்விதமே பால், நெய், சர்க்கரை போன்ற ஆகார வஸ்துக்களை, தேகதாதுக்கள் அதிகமாக தாக்கபடாத வாறு மருந்துகளுடன் சேர்ப்பார்கள்.

**மிளகின் குணங்கள்:—** உஷ்ணவீர்யம்- கடுரஸம்- கடுவிபாகம்-லகு-தீபனம்-பித்தத்தை அதிகரித்து கபத்தை குறைக்கும். ஶ்வாஸம், கப ஜுரம். அஜீர்ணம், குன்மம், கிருமி முதலியவற்றிற்கு நல்லது. (1) மிளகுத்தூள் அரை விராகனிடை காலை மாலை வெந்நீரில் சாப்பிட அஜீர்ணம் போம். (2) சுக்கு, மிளகு, திப்பிலி, வெந்தயம் சமபாகம், சூர்ணம் — முக்கால் விராகனடை உணவிற்குப் பின்பு உட்கொள்ள வயிற்றுவலி, அஜீர்ணம் நீங்கும். (3) மிளகுத்தூள் $\frac{1}{4}$ பலத்தை அரைப்படி நீரில் போட்டு ஆழாக்காய்க் காய்ச்சி கால்—அரை ஆழாக்கு தினம் 2–3 தரம் சாப்பிடத் தொண்டை நோய் தீரும். (4) மிளகு கால் பலம், பெருஞ்சீரகம் 2 பலம், தேன் பலம் சேர்த்து லேகியம் செய்து கழற்சிகாய் பிரமாணம் இருவேளை அருந்த மூலநோய் தீரும். (5) மிளகு 1 பாகம், வெங்காயம் 1 பாகம் உப்பு $\frac{3}{4}$ பாகம் சேர்த்து அரைத்து தலையில் வரும் சொறிகளுக்குப் போட்டால், அவை தீர்ந்து மயிர் வளரும். (6) மிளகு, ஜீரகம், இஞ்சி, மிளகாய், மஞ்சள் ஒவ்வொன்றும் 2 விராகனடை $2\frac{1}{2}$ பலம் நல்லெண்ணெயில் போட்டுக் காய்ச்சி தலைக்குத் தேய்த்துக் கொண்டு வெந்நீரில் ஸ்நாநம் செய்தால் நாட்பட்ட சளி, தலைபாரம் முதலியன போகும். (7) வேப்பங்கொழுந்து 1 பிடி, மிளகு 20, உப்பு சிட்டிகைச் சேர்த்து அரைத்து கழற்சிகாய் பிரமாணம் 3 தரம் சாப்பிடக் குடற்கிருமி போகும். (வயதிற்கேற்றபடி அளவைகுறைக்கவேண்டும்) (8) 20 மிளகை பொடிசெய்து ஆழாக்கு பாலில் போட்டு காய்ச்சி சாப்பிட இரவில் காணும் வறட்டு இருமல் தீரும் (9) மிளகை அப்படியே அரைப் பலம் நெய்யில் போட்டு பொறித்து நெய்யை உட்கொண்டு மிளகை வாயில் அடக்கிக்கொண்டாலும் வறட்டுஇருமல் போகும். (10) மிளகை வெல்லப்பாகில் சுண்டக்காய்பிரமாணம் உண்டைசெய்து வாயில் அடக்கிக் கொண்டாலும் இருமல் தீரும்.

---

**அந்தந்த ஜாதிதர்மத்தை ரக்ஷிப்பது கடமை.**

